தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# நான் யார்?

உங்கள் உண்மை சொருபத்தை விட்டு
எவ்வளவு காலம் மறைந்திருப்பீர்கள்?
உண்மையில் நாம் தெரிந்து கொள்ள
வேண்டியது "நான் யார்"? என்பது தான்.

Tamil

தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# நான் யார்?

நிருபென் அவர்களால் தொகுக்கப்பட்டது மற்றும்
பின்பற்றுபவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

**பதிப்பாளர் :** திரு. அஜீத்.சி.படேல்
தாதா பகவான் விக்ஞான் பௌண்டேஷன்
1, வருண் அப்பார்ட்மெண்ட், 37,ஸ்ரீமாலி சொசைட்டி
நவ்ரங்பூரா காவல் நிலையம் அருகில்,
நவ்ரங்பூரா, அஹமதாபாத் - 380009
குஜராத், இந்தியா.
**தொலைபேசி** : +91 79 3500 2100

தாதா பகவான் பௌண்டேஷன்
5, மம்தாபார்க் சொசைட்டி,
பி/எச், நவ்குஜராத் கல்லூரி,
உஸ்மான்பூரா, அஹமதாபாத் - 380014
குஜராத், இந்தியா.
ஈ-மெயில் : info@dadabhagwan.org
**தொலைபேசி** : +91 70 3500 2100


**உள்நோக்க மதிப்பு :** மிகுந்த பணிவு மற்றும் “நான் யாதொன்றும் அறியேன்” என்ற விழிப்புணர்வு.

**விலை** : ரூ.30

**முதல் பதிப்பு** : நவம்பர் 2022 (1200 பிரதிகள்)

**பிரிண்டர்** : அம்பா மல்டிபிரிண்ட்,
பி-99, எலக்ட்ரானிக்ஸ், ஜி.ஐ.டி.சி.,
கே-6 ரோடு, செக்டர் - 25.
காந்திநகர் - 382044
தொலைபேசி : +91 79 3500 2142

**ISBN/eISBN** : 978-93-91375-28-7
Printed in India

# த்ரிமந்திரம்






நமோ வீதராகாய
நமோ அரிஹந்தானம்
நமோ சித்தானம்
நமோ ஆயரியானம்
நமோ உவஜ்ஜாயானம்
நமோ லோயே சவ்வ சாஹூனம்
ஏசோ பஞ்ச நமுக்காரோ
சவ்வ பாவப்பனாசணோ
மங்களானம் ச்ச சவ்வேசிம்
பதமம் ஹவயி மங்களம்
ஓம் நமோ பகவதே வாசுதேவாய
ஓம் நம சிவாய
ஜெய் சச்சிதானந்தம்





## தாதா பகவான் என்பவர் யார்?

ஜூன் 1958, சுமார் மாலை ஆறு மணிக்கு, சூரத் ரயில் நிலையத்தில், சலசலப்புக்கு மத்தியில் ஒரு பெஞ்சில் அம்பாலால் முல்ஜூபாய் பட்டேல் அமர்ந்திருந்தார். அப்போது தாதா பகவான் அம்பாலால் அவர்களின் புனிதமான உடலுக்குள் முழுமையாக வெளிப்பட்டார். ஆன்மீகத்தின் ஒரு குறப்பிடத்தக்க நிகழ்வை இயற்கை வெளிப்படுத்தியது! ஒரு மணி நேரத்திற்குள் பிரபஞ்சத்தின் தரிசனம் அவருக்கு வெளிப்படுத்தப்பட்டது! நாம் யார்? கடவுள் என்பவர் யார்? உலகை இயக்குபவர் யார்? கர்மா என்றால் என்ன? மோட்சம் என்றால் என்ன? போன்ற அனைத்து ஆன்மீக கேள்விகளுக்கு முழுமையான தெளிவு கிடைத்தது.

அன்று மாலையில், அவர் அடைந்த ஞானத்தை தனது பிரத்தியேக விஞ்ஞான ஆய்வு முறை (ஞானவிதி) மூலம் மற்றவர்களுக்கு இரண்டே மணி நேரத்தில் ஞானம் வழங்கினார். இதை அக்ரம் பாதை என்று குறிப்பிடப்படுகிறது. க்ரம் என்றால் ஒன்றின் பின் ஒன்றாக மேலே ஏறுவது அதாவது படிப்படியாக ஏறுவது, ஆனால் அக்ரம் என்றால் படி இல்லாத எளிதான, லிப்ட் பாதை.

தாதா பகவான் யார் என்பதை அவர் மற்றவர்களுக்கு விளக்கி கூறுவது என்னவென்றால், உங்கள் முன்னால் தெரிபவர் தாதா பகவான் அல்ல நான் ஞானி புருஷ், என்னுள் “பதினான்கு உலகங்களுக்கும் அதிபதியான தாதா பகவான் வெளிப்பட்டு இருக்கிறார்”. அவர் உங்களின் உள்ளும் உள்ளார். அனைவரின் உள்ளும் உள்ளார். ஆனால் அவர் உங்களினுள் வெளிப்படாமல் இருக்கிறார். இங்கு (ஏ.எம்பட்டேல் அவர்களின் உள்) முழுமையாக வெளிப்பட்டு இருக்கிறார். நான் இறைவன் (பகவான்) அல்ல. என்னுள் வெளிப்பட்டிருக்கும் தாதா பகவான் அவர்களை நானும் தலை வணங்குகிறேன்.

## இந்த மொழிப்பெயர்ப்பு பற்றிய குறிப்பு

அம்பாலால் எம் பட்டேல், பொதுவாக தாதா ஸ்ரீ அல்லது தாதா என்று அழைக்கப்படும் ஞானி புருஷ் அவர்கள், ஆன்மீக ஆர்வலர்கள் கேட்கும் கேள்விகளுக்கு பதில் வடிவில் ஆன்மீக சொற்பொழிவுகளை வழங்கினார்.

இந்த சொற்பொழிவுகள் பூஜ்ய டாக்டர் நிருபென் அமீன் அவர்களால் பதிவு செய்யப்பட்டு குஜராத்தி மொழியில் புத்தகங்களாக தொகுக்கப்பட்டது. தாதாஸ்ரீ தனது சத்தசங்கம் மற்றும் ஆத்ம அனுபவ விஞ்ஞானத்தை பற்றிய ஞானத்தை, வார்த்தைக்கு வார்த்தை மற்ற மொழிகளில் மொழிப்பெயர்ப்பது சாத்தியமில்லை. ஏனெனில் சில அர்த்தங்கள் அதில் இழகக் நேரிடும் என்று கூறியுள்ளார். எனவே அக்ரம் விஞ்ஞானம் மூலம் ஆத்ம அனுபவத்தை துல்லியமாக புரிந்து கொள்வதற்காக குஜராத்தி கற்க வேண்டியதன் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தினார். இருப்பினும் தாதாஸ்ரீ தனது சொற்பொழிவை பிற மொழிகளில் மொழிபெயர்க்க தனது ஆசீர்வாதங்களை வழங்கினார். ஏனென்றால் ஆன்மீகத்தை பற்றி கண்டறிய விரும்புபவர்கள் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு பயனடைந்து, பின்னர் தங்கள் சொந்த முயற்சியின் மூலம் முன்னேறி விடுவார்கள்.

இந்தப் புத்தகம் நேரடி மொழிபெயர்ப்பு அல்ல அவரது மூல முதலான சொற்பொழிவு சாரத்தை பாதுகாக்க அதிக கவனம் செலுத்தப்பட்டுள்ளது.

ஆன்மீக சொற்பொழிவுகள் குஜராத்தில் இருந்து தொடர்ந்து மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன.

சில குஜராத்தி வார்த்தைகளின் அர்த்தத்தை வெளிப்படுத்துவதற்கு பல மொழி பெயர்க்கப்பட்ட வார்த்தைகள் அல்லது வாக்கியங்கள் தேவைப்படுகின்றன. எனவே, குஜராத்தி வார்த்தைகளை சிறந்த புரிதலுக்காக

மொழிபெயர்க்கப்பட்ட உரைக்குள் தக்க வைக்கப்பட்டுள்ளன.

குஜராத்தி வார்த்தையை முதன்முறையாக பயன்படுத்தப்பட்ட இடத்தில் அதை சாய்வாக எழுதி அதைத் தொடர்ந்து அடைப்புக் குறிக்குள் அதன் அர்த்தத்தை விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது. பின்வரும் உரையில் குஜராத்தி வார்த்தை மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. இது இரண்டு மடங்கு நன்மைகளை வழங்குகிறது. முதலாவாதாக மொழிபெயர்ப்பின் எளிமை, வாசிப்பதற்கு மற்றும் இரண்டாவதாக இந்த ஆன்மீக விஞ்ஞானத்தை நன்றாக புரிந்து கொள்வதற்கு, முக்கியமான குஜராத்தி வார்த்தைகள், வாசகருக்கு பரிச்சயமாகிறது.

சதுர அடைப்பு குறிக்குள் இருக்கும் உள்ளடக்கம், விஷயத்தின் கூடுதல் தெளிவை அளிக்கிறது. இது குஜராத்தி உள்ளடக்கத்தில் இல்லை.

தாதாஸ்ரீ அவர்களின் ஞான சாரத்தை உலகிற்கு முன் வைக்கும் பணிவான முயற்சி இது. இந்த மொழிப் பெயர்ப்பை படிக்கும் போது ஏதேனும் முரண்பாடு இருந்தால், அது மொழி பெயர்ப்பாளர்களின் தவறு மட்டுமே, விஷயத்தைப் பற்றிய தெளிவான புரிதலை வாழும் ஞானியிடம் தெளிவுபடுத்தி கொள்ள வேண்டும்.

****

## தலையங்கம்

ஒரு நபர் தன் வாழ்க்கையில் சந்திக்கும் எதையும், முழுமையாக உணராமல் (அனுபவிக்காமல்) அதை ஏற்றுக் கொள்ளமாட்டார். இந்த உலகில் உள்ள அனைத்தும் உணரப்பட்டு விட்டது, உணரப்படாமல் இருப்பது ஆத்ம சொரூபத்தை மட்டுமே! கணக்கற்ற பிறவிகளில் “நான் யார்” என்ற புரிந்துணர்வு மட்டும் தான் தடைப்பட்டு உள்ளது. இதனால் தான், அவருக்கு பிறவிகள் முடிவாக்கு வருவதே இல்லை!

இந்த உணர்தல் எப்படி நிகழும்? தன் ஆத்ம சொரூபத்தை உணர்ந்த ஒருவரால் மட்டுமே பிறரை எளிதில் அவர்களின் ஆத்ம சொரூபத்தை உணர வைக்க முடியும்! மனித உடலில் உள்ள பரிபூரண ஆத்மாவின் மகத்துவம், ஆற்றல்கள் மற்றும் மகிமையின் இந்த வெளிப்பாடு. ஞானியை (ஆத்ம ஞானம் உடையவர்) தவிர வேறு யாருமில்லை. ஞானி புருஷ் அவர்கள் ஒருவருக்கு மட்டும் தான் இந்த உலகில் அறியப்பட வேண்டியதற்கு அல்லது செய்ய வேண்டியதற்கு என்று ஏதும் எஞ்சி இருப்பதில்லை! அத்தகைய ஞானி புருஷ் ஆக போற்றப்படும் தாதா ஸ்ரீ அவர்கள், இந்த காலச்சக்கரத்தில் நம்மிடையே இருக்கிறார். மேலும் அவர் நம் மொழியில், நாம் அனைவரும் புரிந்து கொள்ளக்கூடிய எளிய மொழியில், நம் அனைவருக்கும் இருக்கக்கூடிய “நான் யார்?” என்ற அடிப்படை கேள்வியை எளிதில் தீர்த்துவிடுகிறார்.

அது மட்டும் இல்லாமல், (மற்ற கேள்விகான) இந்த உலகம் என்றால் என்ன? இது எப்படி செயல்படுகிறது? செய்பவர் யார்? கடவுள் என்பவர் யார்? மோட்சம் என்றால் என்ன ஞானி புருஷ் என்று யாரை கருதலாம்? சீமந்தர் சுவாமி என்பவர் யார்? புனிதர்கள், குரு மற்றும் ஞானி புருஷ் இடையே என்ன வித்தியாசம்? ஞானியை எப்படி

அடையாளம் கண்டு கொள்வது? ஞான என்பவரின் பணி என்ன? மேலும் தாதாஸ்ரீயின் அக்ரம் பாதை என்றால் என்ன? உள்ளிட்ட கேள்விகளுக்கும் இங்கே தீர்வு காணப்படுகின்றன. கணக்கற்ற பிறவிகளில் ஒருவர் படிப்படியாக மோட்ச பாதையில் முன்னேறி இருக்கிறார். ஆனால் மோட்ச பாதையில் ஒரு 'லி.ஃ.ப்ட்' (எலிவேட்டர்) இருக்கும் அல்லவா? அக்ரம் பாதையின் மூலம் உலக வாழ்க்கை வாழ்ந்து கொண்டு இருந்தாலும், ஒருவருக்கு மோட்சம் கிடைக்கும். மோட்சம் எப்படி அடைய முடியும்? தாதாஸ்ரீ அவர்கள் இதைப் பற்றிய முழுமையான புரிதலை நமக்கு அளித்து, சரியான மோட்ச பாதையை பின்பற்ற நம்மை வழி நடத்துகிறார்.

'நான் யார்'? என்பதை உணர்ந்த பிறகு நமது அனுபவம் எப்படி இருக்கும்? உலக வாழ்க்கையை ஒருவர் தொடர்ந்தாலும், முற்றிலும் பாதிக்கப்படாத ஆத்ம சொரூப நிலையில் இருக்கும் அனுபவத்தை ஒருவரால் உணர முடியும். மனரீதியாகவும். உடல் ரீதியாகவும், வெளிப்புறத்தில் இருந்து தூண்டப்பட்ட பிரச்சனைகளுக்கு மத்தியிலும், அத்தகைய பிரச்சனைகளின் விளைவுகளில் இருந்து விடுபட்டு, ஒருவரால் தொடர்ந்து பரமானந்த நிலையில் இருக்க முடியும். இது அக்ரம் விஞ்ஞானம் (ஆத்ம சொரூபத்தை உணர்வதற்கான படிகளற்ற பாதையின் ஆன்மீக விஞ்ஞானம்) அடைந்த பிறகு ஆயிரக்கணக்கான மகாத்மாக்களுக்கு (அக்ரம் விஞ்ஞானத்தில் ஆத்மாவை உணர்ந்தவர்களை அலைக்கும் சொல்) ஏற்படும் அனுபவம் ஆகும். ஆன்மீக ஆர்வலர்கள் இவற்றையெல்லாம் அடைவதற்கு, இந்த தொகுப்பு அவர்களுக்கு மோட்ச பாதையில் உதவும் ஒரு கலங்கரை விளக்கமாக இருக்க வேண்டும் என்பதே எங்கள் மனமார்ந்த பிரார்த்தனையாகும்.

- டாக்டர் நிரூபென் அமீன்

# நான் யார்?

## (1) நான் யார்?

### பெயர் மற்றும் "நீங்கள்" தனித்தனி

**தாதாஸ்ரீ** : உங்கள் பெயர் என்ன?

**கேள்வி கேட்பவர்** : எனது பெயர் சந்தூபாய்.

**தாதாஸ்ரீ** : உண்மையிலேயே நீங்கள் சந்தூபாய் தானா?

**கேள்வி கேட்பவர்** : ஆம்.

**தாதாஸ்ரீ** : சந்தூபாய் உங்களுடைய பெயர். சந்தூபாய் என்பது உங்களுடைய பெயர் அல்லவா? நீங்களே சந்தூபாய் என்பவரா அல்லது உங்களுடைய பெயர் சந்தூபாய் என்பதா?

**கேள்வி கேட்பவர்** : அது பெயர் மட்டுமே.

**தாதாஸ்ரீ** : ஆம், அப்படியென்றால் நீங்கள் யார்? சந்தூபாய் என்பது உங்களுடைய பெயர் என்றால், நீங்கள் யார்? நீங்கள் மற்றும் உங்களுடைய பெயர் தனித்தனியானவை அல்லவா? நீங்கள், உங்களின் பெயரில் இருந்து தனித்து இருப்பவர் என்றால் நீங்கள் யார்? நான் என்ன கூற வேண்டுகிறேன் என்பது உங்களுக்கு புரிகிறதா? "இது எனது மூக்கு கண்ணாடி" என்று சொன்னால், மூக்கு கண்ணாடி மற்றும் நீங்கள் தனித்து தானே இருக்கிறீர்கள்? இதே போல், நீங்கள் பெயரில் இருந்து தனித்து இருப்பவர் என இன்னும் நீங்கள் உணரவில்லையா?

ஒரு கடையின் பெயர் "ஜெனரல் டிரேடர்ஸ்" என்று பெயரிடப்பட்டால், அதில் எதும் குற்றம் இல்லை. எனினும், நாம் கடை உரிமையாளரை "ஏய் ஜெனரல் டிரேடர்ஸ், இங்கே வா!" என்று சொன்னோம் என்றால் அதற்கு கடை உரிமையாளர் என்ன பதிலளிப்பார் என்றால் "உண்மையில் எனது பெயர் ஜெயந்திலால் மற்றும் 'ஜெனரல் டிரேடர்ஸ்'

என்பது எனது கடையின் பெயர்". ஆகையால் கடையின் பெயர் தனியானது மற்றும் கடை உரிமையாளர் தனியானவர், கடையில் உள்ள பொருட்கள் தனியானது, அனைத்தும் தனித்தனியானவை, அல்லவா? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

**கேள்வி கேட்பவர்** : இது அறிவுபூர்வமாக உள்ளதாக இருக்கிறது.

**தாதாஸ்ரீ** : இருப்பினும் இங்கு, "இல்லை, நானே தான் சந்துபாய்" என்று மக்கள் வலியுறுத்துகின்றனர். அப்படியானால் நீங்கள் கடையின் அடையாள பலகை மட்டுமின்றி கடையின் உரிமையாளரும் நீங்கள் தானா?! 'சந்துபாய்' என்பது வெறும் அடையாளம் சின்னம்.

## நீங்கள் பாதிப்படைகிறீர்களா? அப்படியானால் நீங்கள் ஆத்ம சொரூபமாக நிலவவில்லை!

ஆம், முற்றிலுமாக நீங்கள் சந்துபாய் அல்ல என்று இல்லை. நீங்கள் தான் சந்துபாய் ஆனால் 'நீங்கள் சந்துபாய்' என்பது சார்பு கருத்தின்படி சரியானது.

**கேள்வி கேட்பவர்** : 'நான்' உண்மையில் ஆத்மா தான் ஆனால் எனது பெயர் 'சந்துபாய்'.

**தாதாஸ்ரீ** : ஆம், ஆனால் ஒரு வேளை யாராவது சந்துபாய் அவர்களிடம் அவதூறாக பேசினால், அது உங்களை பாதிக்கிறதா?

**கேள்வி கேட்பவர்** : நான் பாதிக்கப்படுகிறேன்.

**தாதாஸ்ரீ** : அப்படியானால் நீங்கள் சந்துபாய், நீங்கள் ஆத்ம சொரூபமாக (நிலவ) இல்லை. ஆத்ம சொரூபமாக

நீங்கள் (நிலவி) இருந்தால், நீங்கள் பாதிப்பு அடைய மாட்டீர்கள். மேலும் நிகழ்பாட்டின்படி நீங்கள் பாதிப்பு அடைகிறீர்கள் என்பதினால் நீங்கள் முற்றிலும் சந்தூபாய் தான்.

சந்தூபாய் என்கிற பெயருக்கு பழிச்சொல் வீசப்பட்டால் அதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்கள். அடுத்த அறையில் யாரோ ஒருவர் சந்தூபாய் பற்றி தவறாக பேசிக் கொண்டு இருந்தால், நீங்கள் சுவரோடு காதை வைத்து கவனமாக கேட்பீர்கள். யாரவது உங்களிடம் "சுவர் என்ன கூறுகிறது?" என்று கேட்டால், அப்போது, நீங்கள் என்ன கூறுவீர்கள். "இல்லை, சுவர் இல்லை, சுவரின் மறுபுறத்தில் இருப்பவர்கள் என்னை பற்றி பேசிக் கொண்டு இருக்கிறார். அதை தான் நான் கேட்டுக் கொண்டு இருக்கிறேன்". இப்போது, உண்மையிலேயே யாரை பற்றி பேசிக் கொண்டு இருக்கிறார்கள்? சந்தூபாய் பற்றி. ஹே, ஆனால் நீங்கள் சந்தூபாய் அல்ல. நீங்கள் (ஆத்ம சொரூபம் என்றால்) சந்தூபாய் என்ற முகவரிக்குட்பட்ட எதுவாக இருந்தாலும் நீங்கள் ஏற்றுக் கொள்ள மாட்டீர்கள்.

**கேள்வி கேட்பவர்** : உண்மையில், "நான்" தான் ஆத்ம சொரூபம், சரியா?

**தாதாஸ்ரீ** : நீங்கள் ஆத்ம சொரூபம் இன்னும் ஆகவில்லை, அல்லவா! நீங்கள் இன்னும் சந்தூபாய் தானே! "நான் தான் சந்தூபாய் என்ற புரிதல் என்பது தவறான உரிமை கோருதல் (ஆரோபித் பாவ்). ஆம், நான் தான் சந்தூபாய்" என்ற புரிதல் உங்களில் நிறுவபட்டு விட்டது, அது தவறான புரிதல்.

## (2) புரிதல்கள், தவறானது மற்றும் சரியானது ஏராளமான தவறான புரிதல்கள் இருக்கின்றன.

'நான் சந்தூபாய்' என்கிற உங்களின் புரிதல், உங்கள் தூக்கத்திலும் மறைவதில்லை, அல்லவா! மேலும், மக்கள் உங்களுக்கு திருமணம் செய்து வைத்துவிட்ட பின்னர் "நீங்கள் இந்த பெண்ணின் கணவர்", எனக் கூறுவார்கள், எனவே நீங்கள் கணவர் என்கிற பாத்திரத்தை ஏற்றுக் கொண்டு கணவரைப் போல் செயல்படுவீர்கள். அதற்கு பிறகு 'நான் அவளுடைய கணவர்' என்று தொடர்ந்து வலியுறுத்திக் கொண்டே இருப்பீர்கள். யாரேனும் கணவராக என்றென்றும் இருக்க இயலுமா? நீங்கள் விவாகரத்து செய்த அடுத்த நாள் அவளுடைய கணவராக இருப்பீர்களா? எனவே, இப்படி அனைத்து தவறான புரிதல்கள் நிறுவபட்டு விட்டது.

இவ்வாறு, 'நான் சந்தூபாய்' என்பது தவறான புரிதல். அடுத்து 'நான் இந்த பெண்ணின் கணவர்' என்பது இரண்டாவது தவறான புரிதல் 'நான் கிருஷ்ண பகவானின் பக்தன்' என்பது மூன்றாவது தவறான புரிதல். 'நான் வழக்கறிஞர்' என்பது நான்காவது தவறான புரிதல். 'நான் இந்த சிறுவனின் தந்தை' என்பது ஐந்தாவது தவறான புரிதல். 'நான் இந்த சிறுவனின் தாய்மாமன்' என்பது ஆறாவது தவறான புரிதல். 'நான் வெண் சருமம் உடையவன் என்பது ஏழாவது தவறான புரிதல். "நான் நாற்பத்தைந்து வயதானவன்' என்பது எட்டாவது தவறான புரிதல். 'நான் இந்த நபரின் வணிக பங்குதாரர்' என்பதும் தவறான புரிதல் தான். 'நான் வருமான வரி செலுத்துபவன்' எனச் சொன்னால், அதுவும் தவறான புரிதல் தான். இப்படி எத்தனை தவறான புரிதல்கள் நிறுவப்பட்டு இருக்கிறது?

# ‘நான்’ என்பதின் நிலைமாற்றம்

‘நான் சந்தூபாய்’ என்கிற இந்த புரிதல் தான் அஹங்காரம். இது எதனால் என்றால் உண்மையில் எங்கே ‘நான்’ என்கிற உரிமை இல்லையோ அங்கே தவறாக உரிமைக் கோருவது தான் அஹங்காரம்.

**கேள்வி கேட்பவர் :** ‘நான் சந்தூபாய்’ என்று சொல்வதில், அஹங்காரம் எப்படி இருக்க முடியும்? ‘நான் இப்படி தான், நான் அப்படி தான்’, என்று யாராவது சொன்னால், அது வேறுபட்ட விஷயம், ஆனால் அவர் சாதாரணமாக ‘நான் சந்தூபாய்’, என்று சொல்வதில், அஹங்காரம் எங்கே இருக்கிறது?

**தாதாஸ்ரீ :** அவர் சாதாரணமாக சொன்னாலுமே, அஹங்காரம் விலகிவிடுமா? “எனது பெயர் சந்தூபாய்” என்று சாதாரணமாக சொன்னாலும் அது அஹங்காரம் தான். இது எதனால் என்றால் உங்களுக்கு நீங்கள் யார் என்று தெரியாமல், எது நீங்கள் அல்லவோ, அது உங்களின் அடையாளமாக கருதிக் கொள்கிறீர்கள். இப்படி அனைத்துமே முற்றிலுமாக அஹங்காரம் தான், அல்லவா?

“நீங்கள் சந்தூபாய்” (என்று சொல்வது) “நாடகப்பாணிக்காக” மட்டுமே (உலகிய தொடர்புகளில் உங்களின் பொறுப்புகளை வகுப்பதற்காக). ஆகையால் “நான் சந்தூபாய்” என்று சொல்வதில் பிரச்சனை ஏதும் இல்லை, ஆனால் “நான் சந்தூபாய்” என்கிற புரிதல் நிலைப்பெற்று விடக் கூடாது.

**கேள்வி கேட்பவர் :** ஆம், இல்லையெனில், “நான்” என்பதின் நிலைப்பாடு (தவறான இடத்தில்) நிலைக் கொண்டுவிடும்.

**தாதாஸ்ரீ :** “நான்” சரியான இடத்தில் நிறுவப்பட்டால், அது அஹங்காரம் என்பதாகாது. “நான்”, தன்னுடைய சரியான இடத்தில் இல்லாமல் தவறாக உரிமையாக்கிக் கொண்ட இடத்தில் இருப்பதினால் அஹங்காரம் எனப்படும். “நான்”, தவறாக உரிமையாக்கிக் கொண்ட இடத்தில் இருந்து விலகி சரியான இடத்தில் நிலைப் பெற்றுவிட்டால், அஹங்காரம் மறைந்துவிடும். எனவே, “நான்” என்பதை அகற்றப்படக்கூடாது, “நான்” என்பதை பொருத்தமான இடத்தில் நிலை நிறுத்தப்படவேண்டும்.

## ஒருவர் தனது ஆத்ம சொரூபம் பற்றி அறியப்படவில்லையா?

உண்மையில், எண்ணற்ற பிறவிகளில் ஒருவர் தன்னுடைய ஆத்ம சொரூபத்தை அறியாமல் இருப்பதற்கான முயற்ச்சிகளையே மேற்கொண்டுள்ளார். ஒருவர் தன்னுடைய ஆத்ம சொரூபத்தை அறியாமல் இருந்ததோடு மட்டும் அல்லாது மற்ற அனைத்தையும் அறிந்து இருப்பது ஆச்சரியமாக இல்லையா? நீங்கள், உங்களின் ஆத்ம சொரூபத்தை அறியாமல் எவ்வளவு காலம் வரை இருக்க போகிறீர்கள்? (இதை போலவே) எப்போது வரை இருக்க போகிறீர்கள்? இந்த பிறவியின் ஒரே நோக்கம், “நான் யார்” என்பதை அறிந்துக் கொள்வதற்கு மட்டும் தான். மனித பிறவியின் ஒரே நோக்கம் “நான் யார்” என்பதை புரிந்து கொள்வதற்கு தான். இல்லையெனில் அதுவரை நீங்கள் நோக்கமின்றி தொடர்ந்து அலைந்து கொண்டு இருப்பீர்கள். “நான் யார்” என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும், அல்லவா? “நான் யார்” என்பதை தெரிந்து கொள்வது அவசியமானதா அல்லது அவசியமற்றதா?

# (3) "நான்" மற்றும் "எனது" என்பதை பிரிக்கும் ஆய்வுமுறை

## நான் மற்றும் எனது என்பதை பிரிக்கவும்

"நான்" மற்றும் "எனது" என்பதை "பிரிப்பான்" (பிரித்து வேறுபடுத்தும் கருவி) மூலம் உங்களை பிரிக்க கூறி இருந்தால், அப்போது உண்மையில் உங்களால் பிரித்திருக்க முடியுமா? "நான் மற்றும் "எனது" என்பதை பிரிப்பது பயனுள்ளதா அல்ல பயனற்றதா? எப்போதாவது இதை பற்றி தெரிந்து கொள்ள வேண்டும், அல்லவா! "நான்" மற்றும் "எனது" என்பதை பிரிக்கவும். பாலில் இருந்து பாலேடு பிரிப்பதற்காக "பிரிப்பான்" கருவி இருப்பதை போல், அவ்வாறே, ("நான்" மற்றும் "எனது") என்பதை பிரிக்கவும்.

தற்போது உங்களிடம் "எனது" என்று ஏதேனும் இருக்கிறதா? "நான்" தனியாக இருக்கிறது தான் நீங்களா அல்லது "எனது" உடன் இருக்கிறதா?

**கேள்வி கேட்பவர்** : "எனது" கட்டாயமாக உடன் இருக்கிறது.

**தாதாஸ்ரீ** : உங்களுக்கு எவை எல்லாம் "எனது" என்பதில் இருக்கிறது?

**கேள்வி கேட்பவர்** : எனது வீடு மற்றும் வீட்டில் உள்ள அனைத்து பொருட்கள்.

**தாதாஸ்ரீ** : அவை அனைத்து பொருட்களும் உங்களுடையதாக (ஆத்ம சொரூபமான) கருதப்படுகிறதா? மற்றும் மனைவி யாருடையவர்?

**கேள்வி கேட்பவர்** : அவளும் என்னுடையவள்.

**தாதாஸ்ரீ** : அப்படியென்றால், யாருடைய குழந்தைகள் இவர்கள்?

**கேள்வி கேட்பவர்** : அவர்களும் என்னுடையவர்கள்.

**தாதாஸ்ரீ** : மேலும், இந்த கைக்கடிகாரம் யாருடையது?

**கேள்வி கேட்பவர்** : அதுவும் என்னுடையது

**தாதாஸ்ரீ** : அது மட்டும் அல்ல, யாருடைய கைகள் இவை?

**கேள்வி கேட்பவர்** : இந்த கைகளும் என்னுடையது.

**தாதாஸ்ரீ** : மேலும் நீங்கள் என்ன கூறுவீர்கள் என்றால் "எனது தலை, எனது உடம்பு, எனது கால்கள், எனது காதுகள், எனது கண்கள்", என்று உடம்பில் உள்ள இந்த அனைத்து உறுப்புகளையும் "என்னுடையது" என்று கூறும் "நீங்கள்" யார்? இதை பற்றி நீங்கள் சிந்தித்தது இல்லையா? "எனது பெயர் சந்தூபாய்" என்று சொல்கிறீர்கள், பின்னர் "நான் சந்தூபாய்" என்று சொல்கிறீர்கள். (இப்படி சொல்வதில் முரண்பாடு இருப்பதாக நீங்கள் உணரவில்லையா?

**கேள்வி கேட்பவர்** : ஆம்? நான் உணருகிறேன்.

**தாதாஸ்ரீ** : நீங்கள் சத்தூபாய் தான், ஆனால் தற்போது, "நான்" மற்றும் "எனது", அதில் உள்ளடங்கி இருக்கிறது. "நான்" மற்றும் "எனது" என்கிற இரண்டு இரயில் பாதைகள் முற்றிலுமாக தனித்தனியானது, மேலும் எப்போதும் இணையாக இயங்குமே தவிர, ஒரு போதும் ஒன்றிணையாது. இருப்பினும், நீங்கள் ஒன்றிணைந்ததாக எண்ணுகிறீர்கள். இதை புரிந்து கொண்டதினால், "எனது" என்பதை பிரிக்கவும். "எனது" என்பதில் வரும் அனைத்தையும் ஒரு புறம் வைக்கவும். உதாரணத்திற்கு, (நீங்கள் சொல்லுங்கள்) "எனது இதயம்", ஆகையால்

அதை ஒரு புறம் வைக்கவும். இந்த உடலில் இருந்து வேறு எதுவெல்லாம் நாம் பிரிக்க வேண்டும்?

**கேள்வி கேட்பவர்** : கால்கள் மற்றும் அனைத்து உணர் உறுப்புகள்.

**தாதாஶ்ரீ** : ஆம், அனைத்தும். ஐந்து புலன் உறுப்புகள் (ஞான இந்திரியங்கள்; உடல் உறுப்புகளான கண், மூக்கு, காது, நாக்கு மற்றும் சருமம் என்ற இந்த ஐம்புலன்களின் மூலம் பார்த்தல், கேட்டல், நுகர்தல், சுவைத்தல், தொடுதல் என்கிற ஞானம் அடைகிறோம்) மற்றும் ஐந்து செயல் உறுப்புகள் (கர்ம இந்திரியங்கள்; உடற்கழிவுகளை வெளியேற்றும் உறுப்புகள், பிறப்புறுப்புகள், கால்கள், கைககள், நாக்கு ஆகிய ஐந்து கர்ம இந்திரியங்கள் மூலம் கர்ம பலன்களை அனுபவிப்பது)

பிறகு, "எனது மனது" என்று நீங்கள் சொல்வீர்களா அல்ல "நான் தான் மனது" என்பீர்களா?

**கேள்வி கேட்பவர்** : "எனது மனது" என்று நான் சொல்வேன்.

**தாதாஶ்ரீ** : "எனது புத்தி" என்று நீங்கள் சொல்வதில்லையா?

**கேள்வி கேட்பவர்** : ஆமாம்.

**தாதாஶ்ரீ** : மேலும் "எனது சித்தம் (உட்புறத்தில் செயல்படும் உபகரணங்களான மனது, புத்தி, சித்தம் மற்றும் அகந்தை ஆகியவையில் சித்தம் என்பது ஞானம் மற்றும் தரிசனம் உள்ளடக்கிய ஒரு நுட்பமான அங்கம்)" என்று நீங்கள் சொல்வீர்கள் அல்லவா?

**கேள்வி கேட்பவர்** : ஆமாம்.

**தாதாஸ்ரீ :** பிறகு "எனது அஹங்காரம்" என்று நீங்கள் சொல்கிறீர்களா, அல்லது "நான் அஹங்காரம்" என்கிறீர்களா?

**கேள்வி கேட்பவர் :** எனது அஹங்காரம்

**தாதாஸ்ரீ :** "எனது அஹங்காரம்" என்று நீங்கள் சொன்னால், அந்த அளவிற்கு மட்டும் தான் நீங்கள் புரிந்து உங்களை நிலைநிறுத்தி கொள்ள முடியும். ஆயினும் அதற்கு அப்பால் இருக்கின்ற உங்களின் பாகம் எது என்பதும் உங்களுக்கு தெரியவில்லை. ஆதலால் முழுமையான பிரிவு ஏற்படுவதில்லை. உங்களுடையது எது என்று உங்களுக்கு ஓரளவிற்கு மட்டும் தான் தெரியும். நீங்கள் வெளிப்படையாக இருப்பவை மட்டும் தெரிந்து இருக்கிறீர்கள். நுட்பமான விஷயங்களை பற்றி உங்களுக்கு தெரியவில்லை. உள்ளபடியாக, நுட்பமான விஷயங்களை கழிக்க வேண்டும், பிறகு நுண்ணியமான விஷயங்களை கழிக்க வேண்டும், அதன் பின் மிகவும் நுண்ணியமான விஷயங்களை கழிக்க வேண்டும், இந்த அருஞ்செயல் ஞானி புரூஷ் ஒருவருடையது மட்டுமே.

எனினும், நீங்கள் ஒவ்வொரு உதிரி பாகங்களை தொடர்ந்து கழித்து கொண்டே இருந்தீர்கள் என்றால், உங்களால் "நான்" மற்றும் "எனது" என்பதை பிரிக்க முடியும், அல்லவா? "நான்" என்பதில் இருந்து "எனது" என்பதை தொடர்ந்து கழித்து கொண்டே இருந்தால் இறுதியில் நிலைத்திருப்பது எதுவாக இருக்கும்? "எனது" என்பதை நீங்கள் ஒரு புறம் வைத்துவிட்டபின், முடிவாக நிலைத்திருப்பது எதுவாக இருக்கும்?

**கேள்வி கேட்பவர் :** "நான்" என்பது

**தாதாஸ்ரீ :** "நான்" தான் மிகச் சரியான "நீங்கள்"! அவ்வளவு தான். "நான்" என்பதை அறியபடவேண்டும்.

**கேள்வி கேட்பவர் :** அத்தகைய பிரித்தலுக்கு பிறகு, எது மீதம் இருக்கிறதோ அது "நான்" என்று புரிந்து கொள்ள வேண்டுமா?

**தாதாஸ்ரீ :** ஆம், பிரித்தலுக்கு பிறகு நிலைத்திருப்பது நீங்கள் என்பது "நான்" என்பது தான் உண்மையில் நீங்கள். இதைப்பற்றி ஆய்வு செய்யப்பட வேண்டும், அல்லவா? "நான்" மற்றும் "எனது" என்பதை பிரித்து விட்டோம் என்றால், இது சுலபமான முறை தானே?

**கேள்வி கேட்பவர் :** சுலபமாக தான் தோன்றுகிறது, ஆனால் நுண்ணியமான மற்றும் மிக நுண்ணியமான நிலைகளிலும் பிரிக்கப்பட்டால் மட்டுமே அத்தகைய பிரிவு ஏற்படும், சரிதானே? ஞானி அல்லாமல் அது நிகழக்கூடியது அல்ல, அப்படித்தானே?

**தாதாஸ்ரீ :** ஆம், ஞானி புருஷ் அவர்கள் அந்த நிகழ்வை நிகழத்துவார். அதனால் தான் "நான்" மற்றும் "எனது" என்பதை "ஞானியின் பிரிப்பான்" மூலம் "நாங்கள்" பிரிக்க சொல்கிறோம். இந்த "பிரிப்பான்" என்பதை புனித நூல்களின் எழுத்தாளர்கள் என்னவென்று குறிப்பிட்டு இருக்கிறார்கள்? அவர்கள் இதை "பேத ஞானம்" (பிரித்தல், பற்றிய ஞானம்) என்று குறிப்பிடுகிறார்கள். "பேத ஞானம்" இன்றி நீங்கள் எப்படி கழிக்க போகிறீர்கள்? பிரித்தல் பற்றிய ஞானம் அதாவது எவை எல்லாம் உங்களுடையது மற்றும் எவை எல்லாம் உங்களுடையது அல்ல என்கிற ஞானம் உங்களிடம் இல்லை. பிரித்தல் பற்றிய ஞானம் என்றால், இவை அனைத்தும் "என்னுடையது" என்பதினுள் இருக்கிறது, "நான்" அதில் இருந்து தனித்து இருக்கிறேன். எனவே, ஞானி புருஷ் அவர்களின் அருகில் இருந்தால் மட்டுமே அத்தகைய பேத ஞானம் பெற்றுவிட முடியும், அதன் பின் உங்களுக்கு தனித்தனியாகி விடுகிறது.

"நான்" மற்றும் "எனது" என்பதின் இடையே பிரிவு ஏற்படுத்தப்பட்டால், பிறகு மிகவும் சுலபமாக இருக்கும், அப்படித்தானே? "நாங்கள்" காட்டிய இந்த வழிமுறைப்படி ஆன்மீகம் என்பது சுலபமானதா அல்ல கடினமானதா? இல்லையெனில், இந்த யுகத்தின் மனிதர்கள் ஊக்கம் இழக்கும் வரை புனிதநூல்களை படித்துக் கொண்டே இருப்பார்கள்.

**கேள்வி கேட்பவர் :** நாங்கள் புரிந்துக் கொள்வதற்காக உங்களை போன்ற ஒருவரின் உதவி எங்களுக்கு அவசியம் தானே?

**தாதாஸ்ரீ :** ஆம், தேவைதான். ஆனால் ஞானி புருஷ் என்பவர் வெகுவாக தங்களைச் சுற்றி காணபடமாட்டார்கள்! அவர்கள் அரிதாகவே காண முடியும், ஆகையால் உங்களின் வேலையை அப்போது முடித்து கொள்ள வேண்டும். ஒரு மணி நேரம் போல் ஞானி புருஷ் அவர்களின் "பிரிப்பான்" முறையை எடுத்து செல்லவும். அதற்கு வாடகை ஏதும் இல்லை! இந்த முறையினால் பிரிவுப்படுத்திவிட முடியும். அப்போது "நான்" பிரிந்து விடும், இல்லையென்றால் பிரிக்க இயலாது! ஒரு முறை "நான்" பிரிந்து விட்டது என்றால், மற்ற அனைத்து வேலையும் முடிந்தாகிவிடும். அனைத்து புனிதநூல்களின் சாராம்சம் இவ்வளவு தான்.

நீங்கள் ஆத்ம சொரூபம் ஆக வேண்டும் என்றால் "எனது" என்பதென்று இருக்கும் அனைத்தையும் நீங்கள் சமர்பிக்க வேண்டும். "எனது" என்பதை ஞானி புருஷ் அவர்களிடம் சமர்பித்து விட்டால், "நான்" மட்டும் தான் உங்களிடம் நிலைக்கொண்டு இருக்கும். "நான்" மட்டும் தான் உங்களிடம் நிலைக் கொண்டு இருக்கும். "நான்" என்பதுடன் "எனது" இருந்தால் ஜீவாத்மா (உடல் வடிவத்தை தனது சொரூபம் என்கிற புரிதலுடன் இருக்கும்

ஆத்ம நிலை). “நான், மற்றும் இவை அனைத்தும் என்னுடையது” என்கிற நிலை ஜீவாத்மா நிலை. மேலும் “நான் மற்றும் இவை அனைத்தும் என்னுடையது இல்லை” என்கிற நிலை பரமாத்மா நிலை. (பூரண ஞானம் மற்றும் பூரண தரிசனம் மட்டுமே தனது சொரூபம் என்கிற புரிதலுடன் இருக்கும் ஆத்ம நிலை). எனவே, மோட்சம் அடையமுடியாமல் இருப்பதற்கான காரணம் “எனது” என்பதாகும். “நான் யார்” என்ற உணர்தல் ஏற்பட்டு விட்டது என்றால், “எனது” விடைபெற்றுவிடும். “எனது” விடைபெற்றுவிட்டால் மற்ற அனைத்தும் விடைபெற்றுவிடும்.

“எனது” என்பது சார்ந்த பிரிவு மற்றும் “நான்” என்பது மெய். இதன் பொருள் என்னவென்றால், “நான்” ஒரு போதும் தற்காலிகமானது அல்ல, “நான்” என்பது நிரந்திரமானது. “எனது” என்பது தற்காலிகமானது. ஆகையால் “நான்” என்பதை இவை அனைத்தின் இடையே நீங்கள் கண்டறிய வேண்டும்.

## (4) இந்த உலகத்தில் யார் உங்களுடைய மேலதிகாரி?

## “நான்” என்பதின் புரிதலை உங்களுக்கு உணர்த்துபவர் ஞானி ஒருவர் மட்டுமே.

**கேள்வி கேட்பவர்** : உலக வாழ்க்கையில் வாழ்ந்து கொண்டு “நான் யார்” என்கிற விஷயத்தை பற்றி எப்படி அறிந்து கொள்ள முடியும்?

**தாதாஸ்ரீ** : பிறகு, வேறு எங்கு அதை பற்றி அறிந்து கொள்ள முடியும்? உலக வாழ்க்கையை தவிர, வாழ்வதற்கு வேறு ஏதேனும் இடம் இருக்கிறதா? உண்மையில், இவ்வுலகில் அனைவரும் உலக வாழ்க்கை வாழ்ந்து கொண்டு மற்றும் உலக வாழ்க்கையில் இரந்து

கொண்டு இருக்கிறார்கள். இங்கு, “நான் யார்” என்று அறிந்து கொள்ள முடியும். உண்மையிலேயே, இந்த விஞ்ஞானம் “நீங்கள் யார்” என்று புரிந்து கொள்வதற்காக இங்கே வாருங்கள், “நாங்கள்”, உங்களின் மெய்யான ஆத்ம சொரூபத்தை உங்களுக்கு உணர்த்திவிடுவோம்.

“நாங்கள்”, உங்களை கேட்கும் கேள்விகள் அனைத்தையும் நீங்கள் செய்தாக வேண்டும் என்று “நாங்கள்” எதிர்பார்க்கமாட்டோம். உங்களுக்கு அவற்றை செய்வதற்கான செயல்திறனும் இல்லை. அதனால் தான், “நாங்கள்” உங்களுக்கு அனைத்தும் செய்து கொடுக்கிறோம் என்று உங்களிடம் கூறுகிறோம். ஆகையால் நீங்கள் கவலைப்பட தேவையில்லை. சரியாக சொன்னால், முதலில் நீங்கள் அறிந்து கொள்ள வேண்டியது, உண்மையில் “நான் யார்” மற்றும் முக்கியமாக அறிந்து கொள்ள வேண்டியது எது? உண்மை எது? சரியான கருத்துகள் எவை? உலகம் என்றால் என்ன? இவை அனைத்தும் என்ன? பூரண ஆத்ம சொரூபம் (பரமாத்மா) என்றால் என்ன?

பூரண ஆத்ம சொரூபம் என்பது உள்ளதா? நிச்சயமாக, பூரண ஆத்ம சொரூபம் உள்ளது, மேலும் உங்களுக்குள் தான் அது உள்ளது. எதற்காக வெளிபுரத்தில் நீங்கள் அதனை தேடுகிறீர்கள்? எனினும், யவரேனும் உங்களுக்காக “கதவை” திறந்தால் மட்டுமே நீங்கள் காண முடியும், அல்லவா! உங்களால் ஒரு போதும் திறக்க முடியாதபடி, அந்த “கதவு” மூடப்பட்டு இருக்கிறது. அந்த அருஞ்செயல் ஞானி புருஷ் அவர்களுடையது மட்டுமே, அவர் ஒருவர் தான் விடுவிக்கப்பட்ட நிலையை அடைந்து இருக்கிறார். ஆதலால் மற்றவர்களையும் விடுவித்து விடுகிறார்.

## உங்களின் தவறுகளே உங்களுடைய மேலதிகாரி

உண்மையிலேயே, உங்களுடைய மெய்யான சொரூபம் தான் பகவான். உங்களுக்கு மேலதிகாரியாக யாரும் இல்லை மற்றும் உங்களுக்கு உயர் அதிகாரத்துடன் யாரும் இல்லை. உங்களை யாராலும் எதுவும் செய்ய இயலாது. “நீங்கள்” முற்றிலுமாக சுதந்திரமானவர், உங்களின் தவறுகளால் மட்டும் தான் கட்டுப்பட்டு இருக்கிறீர்கள்.

உங்களை விட உயர்ந்தவர் யாரும் இல்லை, அது மட்டுமின்றி, எந்த உயிரினமும் உங்களுடன் குறுக்கிட முடியாது. ஏராளமான உயிரினங்கள் இருக்கின்றன. ஆனால் ஒரு போதும் எந்த உயிரினமும் உங்களுடன் குறுக்கிட முடியாது. எனினும், மனிதர்கள் உங்களிடம் குறுக்கிடுவது ஏன் என்றால் உங்களின் தவறுகளினால் தான் கடந்த காலங்களில், நீங்கள் செய்த குறுக்கீட்டின் விளைவு தான் இது. இதனை “நாங்கள்”, “எங்களுடையதை” கண்டறிந்த பிறகு கூறுகிறோம்.

பின் வரும் இரண்டு வாக்கியங்களில், “நாங்கள்”, உத்திரவாதம் அளிக்கிறோம், அப்போது தான் மனிதன் விடுவிக்கப்பட்ட நிலையில் நீடித்து இருக்க முடியும். “நாங்கள்” சொல்வது இது தான் :

“இவ்வுலகில் உங்களின் மேலதிகாரியாக எவரும் இல்லை. உங்களுடைய பெரும் பிழைகள் மற்றும் உங்களுடைய தவறுகள் தான் உங்களுடைய மேலதிகாரிகள். இவை இரண்டும் இல்லாமல் இருந்தால் நீங்கள் பூரண ஆத்ம சொரூபம்”.

மேலும், உங்களிடம் எவருமே சற்றும் குறுக்கிட மாட்டார்கள். எந்த உயிரினமும், மற்ற உயிரினத்துடன்

சற்றும் குறுக்கிடும் நிலையில் இல்லாமல் இருக்கிறது இவ்வுலகம்.

இவ்விரண்டு வாக்கியங்கள் எல்லாவற்றிற்கும் முற்றுகையும், சமாதானமும் உண்டாக்குகிறது.

## (5) இந்த உலகில் செய்பவர் யார்? இந்த உலகின் செயலாற்றுபவர் யார் என்கிற உண்மை.

உண்மை நிகழ்வுகளை பற்றி அறியாததினால் இத்தகைய அனைத்து சிக்கல்களும் தோன்றி இருக்கின்றன. இப்போது உங்களுக்கு ஏற்கனவே தெரிந்ததை பற்றி நீங்கள் அறிந்து கொள்ள விரும்புகிறீர்களா அல்லது உங்களுக்கு தெரியாததை பற்றி நீங்கள் அறிந்து கொள்ள விரும்புகிறீர்களா?

“உலகம் என்றால் என்ன? உலகம் எப்படி தோன்றியது? உலகத்தை உருவாக்கியவர் யார்? இந்த உலகத்துடன் உங்களுக்கு என்ன தொடர்பு? உங்களின் உறவினர்களிடம் உங்களுக்கு என்ன தொடர்பு? எந்த அடிப்படை ஆதாரத்தில் உங்களுடைய வியாபாரம் செயல்பட்டுக் கொண்டு இருக்கிறது? “நான்” தான் செய்பவரா அல்லது வேறு எவரேனும் செய்பவர் இருக்கிறாரா?” இவை அனைத்தையும் தெரிந்து கொள்வது அவசியம், அல்லவா?

**கேள்வி கேட்பவர் :** ஆமாம்

**தாதாஸ்ரீ :** எனவே முதலில் நாம் தெரிந்து கொள்ள வேண்டியதை பற்றி பேசுவோம். இந்த உலகத்தை படைத்தவர் யார் என்று கருதுகிறீர்கள்? இப்படிப்பட்ட சிக்கல்களுடன், உலகத்தை யார் உருவாக்கி இருப்பார்? உங்கள் கருத்து என்ன?

**கேள்வி கேட்பவர்** : இறைவன் தான் கண்டிப்பாக உருவாக்கி இருப்பார்.

**தாதாஸ்ரீ** : அப்படியானால் ஏன் உலகம் முழுவதும் கவலையில் மூழ்கியுள்ளது? நிச்சயமாக கவலைகள் இல்லாத சூழ்நிலை எதுவும் இல்லை.

**கேள்வி கேட்பவர்** : எல்லோரும் கவலைப்படுகிறார்கள், சரியா?

**தாதாஸ்ரீ** : ஆம், அப்படி இறைவன் இவ்வுலகத்தை உருவாக்கி இருந்தால் என்றால், அவர் ஏன் மிகுந்த கவலைகளுடன் உருவாக்கி இருக்கிறார்? நீங்கள் அவரை சிபிஐ (மத்திய புலனாய்வு துறை) மூலமாக கைது செய்ய வேண்டும். ஆனால் இறைவன் ஒரு போதும் குற்றவாளி அல்ல!! மனிதர்கள் தான் இறைவனை குற்றவாளியாக கருதுகிறார்கள்.

உண்மையில், இறைவன் இந்த உலகத்தை படைத்தவர் அல்ல. இந்த உலகம் அறிவியல் சூழ்நிலை ஆதாரங்களின் மூலம் தான் தோன்றி உள்ளது. எனவே இவை அனைத்தும் இயற்கையின் படைப்பு. குஜராத்தி மொழியில், நான் இதை "வ்யவஸ்தித் சக்தி" (அறிவியல் சூழ்நிலை ஆதாரங்கள் ஒன்று கூடி ஒரு காரியத்தை நிறைவேற்றும் சக்தி). இது உண்மையில் ஒரு நுட்பமான உண்மை.

## அதனை மோட்சம் என்று கருதவே முடியாது!

ஒரு சிறிய சிறுவன் கூறுவான் "இறைவன் தான் இவ்வுலகத்தை உருவாக்கினார்" என்று ஒரு புகழ்பெற்ற புனிதரும் "இறைவன் தான் உருவாக்கினார்" என்று கூறுவார். இது ஒரு உலகியல் கண்ணோட்டம், இரு பௌதிக உலகத்திற்கு அப்பால் செல்வதில்லை.

இறைவன் தான் படைப்பாளராக இருந்தால், அவர் எப்போதும் நமக்கு மேலானவராக இருப்பார் மேலும் மோட்சம் என்று எதுவும் இருந்து இருக்காது. ஆனால் மோட்சம் என்பது இருக்கிறது. இறைவன் படைப்பவர் அல்ல. மோட்சத்தை பற்றி புரிந்தவர்கள், இறைவனை படைப்பவர் என்று நம்புவதில்லை. "மோட்சம்" மற்றும் "இறைவன் தான் படைப்பாளர்" என்று, இந்த இரண்டு கருத்துக்களும் முரண்பட்டது. ஒரு படைப்பாளி என்றால் அவர் என்றென்றும் ஒரு உபகாரியாக கருதப்படுவார், மேலும் ஒரு உபகாரியாக, அவர் எப்போதும் நமக்கு மேலானவராக இருப்பார்.

## அப்படியென்றால் இறைவனை படைத்தது யார்?

இப்போது, நாம் இறைவன் தான் உண்மையில் படைப்பாளி என்று கூறினால், அதற்கு ஒரு தர்க்கரீதியான நபர் நம்மிடம் "அப்படியென்றால் இறைவனை படைத்தவர் யார்?" என்று கேட்பார். எனவே கேள்விகள் எழும்புகின்றன. மக்கள் என்னிடம் கூறுகிறார்கள். "இறைவன் இந்த உலகத்தை இயக்குகிறார் என்று நாங்கள் உணர்கிறோம். இது அப்படி இல்லை என்று நீங்கள் கூறுகிறீர்கள், ஆனால் இதை எங்களுக்கு ஏற்றுக் கொள்ள கடினமாக உள்ளது" அதற்கு நான் அவர்களை கேட்டேன், "அப்படி இறைவன் தான் செய்பவர் என்பதை நான் ஏற்றுக் கொண்டால், பிறகு இறைவனை படைத்தவர் யார்? இதை மட்டும் எனக்கு சொல்லுங்கள். மேலும் இந்த படைப்பாளியை (இறைவன்) படைத்தவர் யார்?" நியாயப்படி படைப்பாளி என்று ஒருவர் இருக்கிறார் என்றால், படைப்பாளியை படைத்தவர் எவரேனும் இருக்க வேண்டும். இருப்பினும், இதற்கு முடிவே இருக்காது, எனவே இந்த கருத்து தவறானது.

## இந்த உலகத்திற்கு ஆரம்பமும் இல்லை, முடிவும் இல்லை.

எனவே, இவ்வுலகம் யாராலும் உருவாக்கபடாமலேயே உருவானதாகும், யாரும் உருவாக்கவில்லை. யாரும் உருவாக்கவில்லை என்பதால் நாம் இதைப் பற்றி யாரிடம் கேட்பது? இவ்வளவு ஒழுங்கற்ற குழப்பத்தை உருவாக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டவரை நானும் தேடிக் கொண்டு இருந்தேன்! நான் அனைத்து இடங்களிலும் தேடினேன். ஆனால் அவரை எங்கும் காணவில்லை.

நான் வெளிநாட்டு விஞ்ஞானிகளிடம் கூறினேன், “இறைவன் படைத்தவர் என்பதற்கான உங்களிடம் உள்ள ஆதாரத்தை என்னுடன் கலந்தாலோசியுங்கள். இறைவன் தான் படைப்பாளர் என்றால், அவர் எந்த வருடத்தில் உலகைப் படைத்தார் என்று கூறுங்கள்?” அதற்கு அவர்கள் “எங்களுக்கு எந்த வருடம் என்று தெரியாது” என பதில் அளித்தார்கள். “மற்றபடி அதற்கு ஆரம்பம் உண்டா இல்லையா?” என்று அவர்களிடம் கேட்டேன். “ஆம், ஆரம்பம் என்று இருந்தது” என்று பதிலளித்தார்கள். ஒரு படைப்பாளி இருக்கிறார் என்று அவர்கள் கூறினால், நிச்சயமாக ஆரம்பம் இருக்க வேண்டும், அல்லவா! ஆரம்பம் உள்ள ஏதொன்றும் அவசியமாக முடிவிற்கு வரும். உண்மையில், இந்த உலகத்திற்கு முடிவே இல்லை. ஆரம்பம் இல்லையென்ற போதில் முடிவு எப்படி இருக்கும்? உண்மையில், இது ஆரம்பம் அல்லது முடிவு இல்லாமல் உள்ளது. ஆரம்பம் இல்லாத ஒன்று, படைப்பாளி கொண்டிருக்க முடியாது, என்று நீங்கள் நினைக்கவில்லையா?

# இறைவனின் சரியான முகவரி

பின்னர் வெளிநாட்டு விஞ்ஞானிகள் என்னிடம் கேட்டார்கள், "அப்படியானால் இறைவன் இல்லையா?" என்று "இறைவன் இல்லை என்றால், இந்த மகிழ்ச்சி அல்லது துன்ப உணர்வுகளை யாரும் அனுபவித்து இருக்க முடியாது. ஆகையால் இறைவன் நிச்சயமாக இருக்கிறார்" என்று நான் அவர்களிடம் கூறினேன். "இறைவன் எங்கே வசிக்கிறார்" என்று அவர்கள் என்னை கேட்டார்கள். "அவர் எங்கே வசிக்கிறார் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்"? என்று நான் கேட்டேன். அதற்கு அவர்கள் "மேலே, மேலே" என்று பதிலளித்தார்கள். அவர் மேலே எங்கே வசிக்கிறார்? அவருடைய தெரு எண் என்ன? அவர் எந்த தெருவில் வசிக்கிறார் என்று தெரியுமா? அவருக்கு கடிதம் அனுப்புவதற்கு சரியான முகவரி உள்ளதா?" என்று நான் கேட்டேன். மேலே எந்த ஒரு உயர் அதிகாரியும் இல்லை. நான் அனைத்து இடங்களுக்கும் சென்றுள்ளேன். அனைவரும் இறைவன் மேலே இருக்கிறார் என்று மேல் நோக்கி சுட்டிக்காட்டி கூறுகிறார்கள். ஆகையால் நான் நினைத்தேன்", எல்லோரும் இப்படிச் சொல்கிறார்கள், எனவே ஏதாவது இருக்க வேண்டும்", அதனால் "நான்" மேலே எல்லா இடங்களிலும் விசாரிக்க புறப்பட்டேன், ஆனால் அங்கு வெற்றிடத்தை தவிர வேறு எதுவும் இல்லை, மேலே யாரும் இல்லை. அங்கு யாரும் வசிக்கவில்லை. அப்போது வெளிநாட்டு விஞ்ஞானிகள் என்னிடம், "இறைவனின் சரியான முகவரியை வழங்க முடியுமா?" எனக் கேட்டனர். நான் அவர்களிடம் சொன்னேன், "எழுதி கொள்ளுங்கள், காணக்கூடிய அல்லது கண்ணுக்கு தெரியாத ஒவ்வொரு உயிரினத்திலும் இறைவன் இருக்கிறார், ஆனால் மனிதனால் உருவாக்கப்பட்ட படைப்பில் இல்லை".

இந்த டேப் ரெக்கார்டர் (ஒலி பதிவு கருவி) ஒரு படைப்பு. மனிதனால் உருவாக்கபட்பட எந்த பொருட்களிலும் இறைவன் வசிப்பதில்லை. இயற்கையாக தோன்றும் அனைத்திலும் இறைவன் இருக்கிறார்.

## ஒருவரின் சொந்த வசதிக்கு ஏற்ப கொள்கைகளைப் பயன்படுத்துதல்

எனவே இது அறிவியல் சூழ்நிலை ஆதாரம். பல சூழ்நிலைகள் ஒன்று கூடும் போது தான் வேலை முடிவடைகிறது. அதில், நீங்கள் அஹங்காரத்துடன் “நான் அதை செய்தேன்” என்று உரிமைக்கோரிக் கொண்டு இருக்கிறீர்கள். உண்மையில் விஷயங்கள் நன்றாக செயல்புரிந்து விட்டால், “நான் அதை செய்தேன்” என்று மக்கள் உரிமைக் கோருவார்கள், அது மட்டும் அல்ல, விஷயஙகள் நன்றாக செயல்புரியாவிட்டால், “என் சூழ்நிலைகள் இப்போது சாதகமாக இல்லை” என்று அவர்கள் கூறுவார்கள். இப்படியெல்லாம் நம் மக்கள் பேசுவதில்லையா? நம் மக்கள் சூழ்நிலைகளை நம்புகிறார்கள், அல்லவா?

**கேள்வி கேட்பவர் :** ஆம்

**தாதாஸ்ரீ :** ஒருவர் பணம் சம்பாதிக்கும் போது, அவர், தானே சம்பாதிப்பவன் என்ற புரிதலில் இருந்து எழும் இன்பத்தை அனுபவிக்கிறார், ஆனால் நஷ்டம் ஏற்படும் போது சாக்கு போக்கு கூறுகிறார். நீங்கள் அவரிடம் “என்ன நடக்கிறது நண்பரே? ஏன் சமீபகாலமாக இப்படி ஆகிவிட்டீர்கள்?” என்று கேட்டால், “இறைவன் என் மீது கோபமாக இருக்கிறார்” அவர் பதிலளிப்பார்.

**கேள்வி கேட்பவர் :** முடிவில் ஒருவர் தனது சொந்த வசதிக்கேற்ப கொள்கைகளை பயன்படுத்தி கொள்கிறார்.

**தாதாஸ்ரீ :** ஆம் அவரின் வசதிக்கேற்ப இறைவன் மீது அப்படி ஒரு குற்றச்சாட்டு கூறக்கூடாது. நீங்கள் ஒரு வழக்கறிஞரைக் குற்றம் சாட்டினாலோ அல்லது வேறு யாரையாவது குற்றம் சாட்டினாலோ பரவாயில்லை, ஆனால் இறைவன் மீது "குற்றச்சாட்டு சுமத்தலாமா! ஒரு வழக்கறிஞர் வழக்குத் தாக்கல் செய்து நஷ்டஈடு கோரலாம். ஆனால் இந்த வழக்கை யார் தாக்கல் செய்வார்கள்? இதன் விளைவு, அடுத்த ஜென்மத்தில் அளவுகடந்த பந்தத்தை ஏற்படுத்துகிறது. இறைவன் மீது குற்றம் சாட்ட முடியுமா?

**கேள்வி கேட்பவர் :** குற்றம் சாட்டக் கூடாது.

**தாதாஸ்ரீ :** இல்லையெனில், "என் ஜாதக நட்சத்திரங்கள் சாதகமாக இல்லை" என்று கூறுவார். அதுவும் இல்லையென்றால், "என் தொழில் பங்குதாரர் மோசடி செய்பவர்" என்று கூறுவார். மேலும் தனது தொழில் பங்குதாரரிடம் எதிர்ப்புகளை எழுப்புவார். இல்லையென்றால் "என் மருமகள் துரதிர்ஷ்டசாலி" என்று அவர் கூறுவார். எதுவாயினும், பழியை அவர் ஏற்றுக்கொள்ள மாட்டார்! அவர் ஒரு போதும் தனது பொறுப்பு என்று ஒப்புக் கொள்ள மாட்டார். நான் ஒரு வெளிநாட்டு நபரிடம் பேசினேன், அவர் என்னிடம் "செய்த குற்றத்திற்கு இந்தியர்கள் ஏன் பொறுப்பேற்க மறுக்கிறார்கள்" என்று கேட்டார். அதற்கு நான் பதிலளித்தேன் அது தான் இந்திய புதிர். மிகப் பெரிய புதில் என்று ஒன்று இருந்தால், அது இந்தியாவின் புதிராகத்தான் இருக்கும்.

## அறிவியல் சூழ்நிலை ஆதாரம்

எனவே இதைப் பற்றி கலந்துரையாடுங்கள், நீங்கள் எதைப் பற்றி வேண்டுமானாலும் கலந்துரையாடுங்கள்.

விஷயங்களைப் பற்றி கலந்துரையாடுவதினால், நீங்கள் எல்லா விளக்கங்களையும் பெறுவீர்கள்.

**கேள்வி கேட்பவர்** : "அறிவியல் சூழ்நிலை ஆதாரம்" என்கிற இந்த வாக்கியம் எனக்கு புரியவில்லை.

**தாதாஸ்ரீ** : இவை அனைத்தும் அறிவியல் சூழ்நிலை ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டவை. இந்த உலகில் ஒரு அணுவையும் (உயிரற்ற ஜடப்பொருட்களின் மிகச் சிறிய பிரிக்க முடியாது மற்றும் அழிக்க முடியாத துகள்) மாற்ற முடியாது. இப்போது நீங்கள் உணவு உண்பதற்கு அமர்ந்தால், என்ன உண்ணப் போகிறோம் என்று உங்களுக்கே தெரியாது! உணவு சமைப்பவருக்கும் நாளைய மெனுவில் (உணவு பட்டியல்) என்ன இருக்கும் என்று தெரியாது! இது எப்படி நடந்து முடிகிறது என்பதும் ஆச்சரியம் தான்! உங்களால் எவ்வளவு சாப்பிட முடியும், எவ்வளவு சாப்பிட முடியாது ஆகியவற்றிற்கான அணுக்கள் முன்கூட்டியே அமைக்கப்பட்டுள்ளது (நம்-உள்ளே).

இன்று நீங்கள் என்னை சந்தித்தது, எதன் அடிப்படையில் நடந்தது? அது அறிவியல் சூழ்நிலை ஆதாரத்தினால் மட்டுமே, நிகழ்ந்தது இதற்கு மிக நுட்பமான காரணங்கள் உள்ளன. அந்த காரணங்கள் என்ன என்பதைக் கண்டறியவும்.

**கேள்வி கேட்பவர்** : ஆனால் அவற்றை எவ்வாறு கண்டறிவது?

**தாதாஸ்ரீ** : நீங்கள் இப்போது இங்கு வந்திருப்பது, உங்கள் கையில் இல்லை. "நான் வந்தேன், நான் சென்றேன்" என்ற அஹங்காரத்துடன் நம்புகிறீர்கள். நீங்கள் "நான் வந்தேன்", என்று கூறுகிறீர்கள், அதற்கு நான் "நீங்கள் ஏன் நேற்று வரவில்லையா?" என்று கேட்கும் போது, நீங்கள் உங்கள்

கால்களை காட்டுகிறீர்கள். அதற்கு என்ன பொருள் புரிந்து கொள்ள வேண்டும்?

**கேள்வி கேட்பவர்** : என் கால்கள் வலித்தது என்று

**தாதாஸ்ரீ** : ஆம், உங்கள் கால்கள் வலித்தது. உங்கள் கால்களை நீங்கள் குறை கூறும் போது, உங்களுக்கு புரியவில்லையா அதாவது நீங்களே இங்கு வந்தீர்களா அல்லது உங்கள் கால்கள் உங்களை இங்கு கொண்டு வந்ததா என்று?

**கேள்வி கேட்பவர்** : இருப்பினும், "நான் வந்தேன்" என்று தான் கருதப்படும், இல்லையா?

**தாதாஸ்ரீ** : உண்மையிலேயே, நீங்கள் தான் வந்தீர்கள், அல்லவா? உங்கள் கால்கள் வலித்தது என்றால், மீண்டும் நீங்கள் வருவீர்களா?

**கேள்வி கேட்பவர்** : இங்கு வரவேண்டும் என்ற என் விருப்பத்தினால் தான் நான் வந்தேன்.

**தாதாஸ்ரீ** : ஆம், உங்களுக்கு விருப்பம் இருந்தது, அதனால் நீங்கள் வந்தீர்கள். இருப்பினும் உங்கள் கால்கள் மற்றும் அனைத்தும் நன்றாக செயல்பட்டதினால் தான் உங்களால் இங்கு வர முடிந்தது, இல்லையா? அவை சரியாக செயல்படவில்லை என்றால் என்ன செய்து இருப்பிர்கள்?

**கேள்வி கேட்பவர்** : அப்போது நான் வந்திருக்க முடியாது, உண்மை தான்.

**தாதாஸ்ரீ** : எனவே நீங்கள், உங்கள் விருப்பப்படி இங்கு வர முடியுமா? எப்படி, ஒருவர் இங்கு வண்டியில் வந்துவிட்டு "நான் வந்தேன், நான் வந்தேன்" என்று கூறுவதை போல், அப்போது நான் அவரிடம் "உங்கள்

கால்களில் பக்கவாதம் ஏற்பட்டு இருக்கிறது. பிறகு எப்படி நீங்கள் இங்கு வந்தீர்கள்" என்று கேட்பேன். அதற்கு அவர், "நான் வண்டியில் வந்தேன், ஆனால் இங்கு வந்தது நான் தான், உண்மையில் இங்கு வந்தது நான் தான்", என்று பதிலளிப்பார். எனினும், "ஹே, நீங்கள் வந்தீர்களா அல்லது வண்டி உங்களை அழைத்து வந்ததா?" அதற்கு அவர் "வண்டி என்னை அழைத்து வந்தது", என்று பதிலளிப்பார். அதற்கு நான் கேட்பேன், "உங்களை அழைத்து வந்தது வண்டியா அல்லது உங்களை அழைத்து வந்த வண்டியை இழக்கும் காளைகளா?" என்று.

எனவே, இது உண்மைக்கு அப்பாற்பட்டது! ஆனால் சற்று சிந்தியுங்கள், ஒருவர் தவறான விஷயங்களை நம்பிக் கொண்டு இருக்கிறார்! இத்தகைய சூழ்நிலைகள் அனைத்தும் சாதகமாக இருந்தால் மட்டுமே, ஒருவர் இங்கு வர முடியும், இல்லையென்றால் வர முடியாது.

உங்களுக்கு தலைவலி இருந்தால், இங்கு வந்த பிறகும், நீங்கள் திரும்ப செல்ல வேண்டி இருக்கும். அப்படி நீங்கள் தான் இங்கு வந்து சென்றவர் (உங்களின் விருப்பப்படி) என்றால், தலைவலி இருக்கிறது என்று நீங்கள் பொய் காரணம் காட்ட கூடாது, அல்லவா? அப்படியானால், உங்களை இங்கு அழைத்து வந்தது உங்களின் தலையா அல்லது நீங்கள் இங்கு வந்தீர்களா? இல்லையெனில், இங்கு வரும் வழியில் யாராவது உங்களை சந்தித்து "சந்தூபாய் வா, என்னுடன் வா", என்று கூறினால், நீங்கள் திரும்பிச் செல்ல வேண்டி இருக்கும். எனவே, சூழ்நிலைகள் சாதகமாக இருந்து, இங்கு வரும் வழியில் எந்த தடைகளையும் எதிர்கொள்ளாமல் இருந்தால் தான், நீங்கள் இங்கு வர முடியும்.

## உங்களுக்கு எவ்வளவு அதிகாரம் இருக்கிறது?

"நீங்கள்" ஒரு போதும் சாப்பிட்டது இல்லை, உண்மையில், சந்தூபாய் தான் இவை அனைத்தையும் சாப்பிடுபவர் ஆனால் நீங்கள் "நான் தான் சாப்பிட்டேன்" என்று நம்புகிறீகள். உண்பவரும் சந்தூபாய் தான், மலம் கழிப்பவரும் சந்தூபாய் தான். எந்த காரணமும் இல்லாமல் நீங்கள் இதில் சிக்கியுள்ளீர்கள். உங்களுக்கு இது புரிகிறதா?

**கேள்வி கேட்பவர்** : தயவு செய்து இதை விளக்கவும்.

**தாதாஸ்ரீ** : இவ்வுலகில் மலம் கழிப்பதற்கான சுதந்திர அதிகாரமுடையவர் யாரும் பிறக்கவில்லை. மலம் கழிப்பதற்கான சுதந்திர அதிகாரம் யாருக்கும் இல்லை, பிறகு வேறு எந்த அதிகாரம் அவருக்கு இருக்கிறது? அப்படியே, ஒரு சில விஷயங்கள் ஒருவரின் திட்டப்படி செயல்பட்டுவிட்டால், "எல்லாம் என்னால் தான் நிகழ்கிறது", என்று அவர் நம்பிக் கொள்கிறார். அவருக்கு மலச்சிக்கல் ஏற்படும் போது தான் உண்மை புரியும்.

ஒரு முறை, நான் வடோதராவில், வெளிநாட்டு மருத்துவர்கள் பத்து, பன்னிரெண்டு பேரை சந்தித்து பேச ஏற்பாடு செய்தேன். நான் அவர்களிடம் "மலம் கழிப்பதற்கான சுதந்திர சக்தி உங்களிடம் இல்லை" என்று கூறினேன். அதற்கு அவர்கள் அனைவரும் திடுக்கிட்டு போனார்கள். அவர்களிடம் நான் கூறினேன், "உங்களுக்கு மலச்சிக்கல் ஏற்படும் போது தான் இதை நீங்கள் உணர்வீர்கள். அத்தகைய சூழ்நிலையில் நீங்கள் வேறொருவரின் உதவியை நாட வேண்டியிருக்கும்". ஆதலால் இது உங்களின் சுதந்திர சக்தி இல்லை. மாயையினால், நீங்கள் இயற்கையின் சக்தியை, உங்களின் சக்தி என்று நம்பிக் கொள்கிறீர்கள். உங்களின்

கட்டுப்பாட்டில் இல்லாததை, உங்கள் கட்டுப்பாட்டில் இருப்பதாக நம்புவதற்கு பெயர் தான் மாயை. இது உங்களுக்கு ஓரளவு புரிந்ததா? உங்களுக்கு கொஞ்சமாவது புரிந்ததா?

**கேள்வி கேட்பவர் :** ஆம், எனக்கு புரிந்தது.

**தாதாஸ்ரீ :** நீங்கள் இவ்வளவு மட்டும் புரிந்து கொண்டாலே இறுதித்தீர்வு உண்டாகிவிடும். இந்த மக்கள் எல்லாம் சொல்கிறார்கள் அல்லவா "நான் இவ்வளவு தவம் செய்தேன், நான் ஜபம் செய்தேன், நான் விரதம் இருந்தேன்" என்று, அவை அனைத்தும் மாயை தான். இருப்பினும், உலகம் எப்போதும் இப்படியே தான் இருக்கப் போகிறது. அஹங்காரம் வெளிப்படுவதை, மக்களால் தவிர்க்க முடியாது. அது ஒருவருடைய சுபாவம், இல்லையா?

## செய்பவர், கண்கூடாகச் செய்பவர்...

**கேள்வி கேட்பவர் :** உண்மையில் ஒருவர் செய்பவர் இல்லை என்றால், செய்பவர் யார்? மேலும் அவருடைய உண்மை சொரூபம் என்ன?

**தாதாஸ்ரீ :** உண்மை என்னவென்றால், சான்று செய்பவராக தான் ஒருவர் இருக்கிறார். நிச்சயமாக ஒருவர் சுதந்திரமாக செயல்படுபவர் அல்ல, அவர் ஒரு ஆதாரமாக செயல்படுபவர் தான். ஆகவே, அவர் ஒரு பாராளுமன்ற முறைபடி செயல்படுபவர். பாராளுமன்ற முறை என்றால் என்ன? எப்படி பாராளுமன்றத்தில் அனைவரும் வாக்களிக்கிறார்களோ மற்றும் தானும் வாக்களித்து விட்டு, பிறகு அதன் அடிப்படையில் "நான் நிச்சயமாக இதைச் செய்ய வேண்டும்" என்று முடிவு செய்கிறார். எனவே இதுவரை மட்டுமே அவர் செய்பவர் ஆவார், திட்டம் உருவாகும் வரை அவர் செய்பவர் ஆவார். ஒருவர் தானே

திட்டமிடுகிறார். திட்டமிடுதலில் மட்டும் தான், செய்பவர் என்பது இருக்கிறது, திட்டமிடுதலில் ஒருவர் தனது ஒப்புதலை அளிக்கிறார். ஆனால், இதை உலகம் அறியவில்லை. சிறிய "கணினியில்" இருந்து ஊட்டம் (உள் நோக்கம்) என்பது வெளியீடு ஆகிறது பிறகு அந்த "உட்செலுத்துவது" பெரிய கணினியில் உள்ளீடு ஆகிறது. இப்படி தான், உருவாக்கப்பட்ட திட்டம் பெரிய "கணினியில்" செலுத்தப்படுகிறது, பிறகு பெரிய "கணினி" அதற்குரிய பொருத்தமான விளைவை வெளியிடுகிறது. எனவே இந்த வாழ்வில், வாழ்க்கை முழுவதும் வெளியேற்ற வடிவில் தான் உள்ளது. அதற்கான காரணங்கள் முந்தைய வாழ்வில் உருவாக்கப்பட்டு இருக்கிறது. பிறப்பு முதல் இறப்பு வரை, இவ்வாழ்வு வெளியேற்ற வடிவில் தான் உள்ளது. ஒருவரின் கைகளில் எதுவும் இல்லை, அது அனாத்மாவின் அதிகாரத்திற் குட்பட்டது. திட்டம் தீட்டியவுடன், அனைத்தும் அனாத்மாவின் அதிகாரத்திற்குட்பட்டுவிடுகிறது. அந்த உட்பொருளானது உறுதியான இருப்பில் விளைவை ஏற்படுத்துவதில் பங்கு வகிக்கிறது. எனவே வெளிப்படும் விளைவு வேறுபடுகிறது. வெளிப்படும் விளைவு அனாத்மாவின் அதிகாரத்திற்குட்பட்டது. இது உங்களுக்கு புரிகிறதா? இது மிகவும் ஆழமான கருத்து.

## செயலாற்றுவதால் கட்டுண்டாகும் கர்மா

**கேள்வி கேட்பவர்** : கர்ம பந்தத்திலிருந்து விடுபட நான் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ** : இந்த கர்மா செய்பவரை சார்ந்ததாகும். ஆகையால் ஒருவர் செய்பவராக இருந்தால் மட்டுமே கர்மவினை கட்டுண்டாகிறது, அப்படி ஒருவர் செய்பவராகாவிட்டால், கர்மவினை கட்டுண்டாவதில்லை. செய்பவர் ஆவது எதனால் "நான் சந்தூபாய்" என்ற

தவறான புரிதலில் ஒருவர் நிலைக் கொள்வதினால் (ஆரோபித் பாவ்), செய்பவராகிறார். ஒருவர் தன் மெய்யான சொரூபத்திற்காக வந்துவிட்டால், அவர் செய்பவராவதே இல்லை. "நான் செய்தேன்", என்று ஒருவர் கூறும் போது, அவர் செய்பவராகிறார். அதனால் காமாவிற்கு ஆதரவளிக்கிறார். இப்போது, அவர் செய்பவராகாவிட்டால், கர்மவினை விலகிவிடும், கர்மவினையை ஆதரிக்காமல் இருக்கும் வரை, அவை விலகிவிடும். எனவே செய்கிறவர் என்ற உணர்வு இருக்கும் வரை கர்மவினை ஏற்படுகிறது.

"ச்சூட்டே தேஹாத்யாஸ் தோ நஹி கர்தா தூ கர்ம, நஹி போக்தா தூ தேஹ்நோ ஏஜ் தர்மனோ மர்ம".

"நான் தான் இந்த உடல்" என்ற புரிதல் நீங்கிவிடும் போது, நீங்கள் கர்மவினை செய்பவர் அல்ல, மற்றும் கர்மவினையினால் பாதிப்படைபவரும் நீங்கள் அல்ல, உண்மையில் இதுதான் மதத்தின் சாராம்சம்.

- ஸ்ரீமத் ராஜசந்த்ர

தற்போது, "நான் சந்தூபாய்" என்று நீங்கள் நம்புவதினால், ஆத்மா மற்றும் அனாத்மா ஒன்றாகிவிட்டது. இருப்பினும், இந்த இரண்டு உட்பொருள்களும் தனித்தனியானவை. "நீங்கள்" தனி மற்றும் சந்தூபாய் தனி. இருப்பினும். இதைப் பற்றி நீங்கள் அறியாத வரை, என்ன செய்ய முடியும்? ஞானி புருஷ் பேத விஞ்ஞானம் (ஆத்மாவை, அனாத்மாவில் இருந்து பிரிக்கும் விஞ்ஞானம்) மூலம் பிரிக்கிறார். எனவே, ஒரு முறை நீங்கள் பிரிந்த பின்பு, நீங்கள் எதுவும் "செய்ய" வேண்டியதில்லை, சந்தூபாய் எப்போதும் செய்து கொண்டு இருப்பார்.

## (6) பேதஞானம் யார் வழங்க முடியும்? ஆத்மா மற்றும் அனாத்மாவை அறிவியல் பூர்வமாக - பிரித்தல்.

இந்த மோதிரத்தில் தங்கம் மற்றும் தாமிரம் என்ற இரண்டும் ஒன்றாகக் கலந்திருப்பதாக வைத்துக் கொள்வோம். அதை நீங்கள் சொந்த ஊருக்கு எடுத்துச் சென்று உங்கள் குடும்பத்தாரிடம், “தயவு செய்து எனக்கு தங்கம் மற்றும் தாமிரத்தை பிரித்து தரவும்!” என்று கேட்பீர்கள் என்றால், அப்போது அங்கிருக்கும் அனைவரும் உங்களுக்காக பிரித்து விடுவார்களா? யாரேனும் செய்து கொடுப்பார்களா?

**கேள்வி கேட்பவர் :** பொற்கொல்லர் மட்டும் தான் அவ்வாறு செய்து கொடுக்க முடியும்.

**தாதாஸ்ரீ :** யாரொருவர் அந்த தொழிலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாரோ, யார் அதில் நிபுணத்துவம் பெற்றிருக்கிறாரோ, அவர் தங்கம் மற்றும் தாமிரத்தை பிரித்து விடுவார், அவர் நூறு சதவீதம் தங்கத்தை பிரித்து விடுவார். ஏனென்றால் இவை இரண்டின் குணஇயல்பை (ஒரு குறிப்பிட்ட செயல்பாடு கொண்ட உள்ளியல்பு தன்மை) பற்றி, அவர் அறிந்திருப்பதினால், அவருக்கு “தங்கத்தின் குணஇயல்பு மற்றும் தாமிரத்தின் குணஇயல்பு” எத்தகையது என்பதை அறிவார். அதைப்போலவே, ஞானி புருஷ் ஆத்மா மற்றும் அனாத்மாவின் குணஇயல்பை பற்றி அறிவார்.

மோதிரத்தில் இருக்கும் தங்கம் மற்றும் தாமிரம் கலவை வடிவில் இருப்பதால் அவற்றை பிரிக்க முடியும். அப்படி தங்கம் மற்றும் தாமிரம் சேர்மானம் ஆகிவிட்டால், பிறகு அதை பிரிக்க முடியாது. ஏனெனில், குணதர்மம் முற்றிலும் வேறுபட்டதாகி விடும். அதே போல் ஒருவரில்

ஆத்மா மற்றும் அனாத்மா கலவையாக உள்ளது, அவை சேர்மானம் வடிவில் இல்லை. அதனால் தான் அவை இரண்டின் இயல்பு தன்மையை மீண்டும் அடையாளம் காண முடிகிறது. அப்படி சேர்மானம் ஆகிவிட்டால், தனிப்பட்ட இயல்பு தன்மை மீண்டும் காண முடியாது. ஆத்மாவின் குணஇயல்பு மற்றும் அனாத்மாவின் குண இயல்பு, இரண்டையும் காண முடியாது. மேலும் மூன்றாவதாக முற்றிலும் புதிய குணஇயல்பு வெளிப்படும். ஆனால் இது அப்படி அல்ல. இது வெறும் கலவையாக உள்ளது. அதனால் தான் ஞானி புருஷ் இவை இரண்டையும் பிரிக்கும் போது ஆத்மா உணரப்படுகிறது.

## ஞான விதி என்றால் என்ன?

**கேள்வி கேட்பவர்** : உங்களுடைய இந்த ஞான விதி என்றால் என்ன?

**தாதாஸ்ரீ** : ஞானவிதி என்பது ஆத்மா மற்றும் அனாத்மாவை (புத்கல்) பிரிப்பது! இது சுத்த ஆத்மா (சுத்த ஞானம்) மற்றும் அனாத்மாவை பிரிக்கிறது.

**கேள்வி கேட்பவர்** : இந்த தத்துவம் சரியாக உள்ளது ஆனால் நான் இதன் செயல்முறையை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**தாதாஸ்ரீ** : ஒருவர் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை, ஒருவர் இங்கே அமர்ந்து. சொல்வதை அவ்வாறே சரியாக திரும்பச் சொல்ல வேண்டும். ("நான் யார்" என்பதை உணர வழிவகுக்கும் இரண்டு மணி நேர அறிவியல் பரிசோதனை. நாற்பத்து எட்டு நிமிடங்களுக்கு, ஒருவரை பேத விஞ்ஞானத்தின் வாக்கியங்களை திருப்பிக் கூறும்படி கேட்கப்படுகிறார், இது ஆத்மா மற்றும் அனாத்மாவை பிரிக்கிறது. அதை, வந்திருக்கும் அனைவரும் ஒன்றாக திருப்பிச் சொல்ல வேண்டும். அதற்கு பின், ஒரு மணி

நேரத்தில், ஐந்து ஆணைகளை (ஞான விதிக்குப் பின் ஞான நிலையை நிலை நிறுத்த ஞான புருஷ் அவர்களால் வழங்கப்படும் சிறப்பு வழிமுறைகள்) எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக விளக்கப்படுகிறது. அதில், (புதிய கர்மயேற்றம் ஆகாமல்) இனி இருக்கும் வாழ்க்கையை எப்படி முன்னோக்கி நடத்துவது, மற்றும் கடந்த ஜென்மத்தில் கட்டுண்ட கர்மவினையை எப்படி முழுமையாக வெளியேற்றுவது, மேலும் அதனுடன், "நான் சுத்தாத்மா" என்று நிறுவப்பட்ட விழிப்புணர்வு எப்படி எப்போதும் நிலவச் செய்வது, என்பதை குறித்து தெரிவிக்கப்படுகிறது.

## குரு அல்லது ஞானி, யார் தேவை?

**கேள்வி கேட்பவர்** : தாதாவை சந்திப்பதற்கு முன்பே, ஒருவருக்கு குரு இருந்தால், என்ன செய்வது?

**தாதாஶ்ரீ** : அவரை சந்திக்க உங்களுக்கு விருப்பமில்லாவிடடால், சந்தித்தே ஆக வேண்டும் என்கிற கட்டாயமில்லை. உங்களுக்கு விருப்பம் இருந்தால் நீங்கள் சென்று வரலாம், அப்படி உங்களுக்கு விருப்பம் இல்லை என்றால் செல்ல வேண்டாம். உண்மையில், அவர் துக்கப்படாமல் இருக்க வேண்டும் என்ற காரணத்திற்காக நீங்கள் சென்று வரலாம். நீங்கள் அவரிடம் பணிவாக இருக்க வேண்டும். இங்கு ஞானவிதியில் "ஞானம்" எடுக்கும் போது, யாரேனும் "இப்போது நான் என்னுடைய குருவை விட்டு விட வேண்டுமா" என்று என்னை கேட்டால், அப்போது நான் அவரிடம், "ஹே, அவரை விட்டு விட வேண்டாம், அந்த குருவின் ஆற்றிலினால் தான் நீங்கள் இதுவரை வந்திருக்கிறீர்கள்" என்று கூறுவேன். குருவை பின்பற்றுவதினால், ஒருவர் சில வரம்புகளுக்குட்பட்டு இருக்கிறார். குரு இல்லாத போது வரம்புகளும் இருப்பது இல்லை. இருப்பினும், நீங்கள் குருவிடம் சொல்லலாம், "நான் ஞானி புருஷ் அவர்களை சந்தித்தேன். நான்

அவரை தரிசனம் (தெய்வீக காணுதல்) செய்ய செல்கிறேன்", என்று. சிலர் தங்களுடைய குருவையும் என்னிடம் அழைத்து வருகிறார்கள். ஏனென்றால் குருவும் மோட்சம் அடைய விரும்புகிறார், அல்லவா! குரு இல்லாமல் உலக வாழ்க்கையைப் பற்றிய அறிவையும் பெற முடியாது மற்றும் மோட்சத்திற்கு வழிவகுக்கும் அறிவையும் பெற முடியாது. உலக தொடர்புக்காக (வ்யவஹார்) உலகிய குரு, ஆனால் ஞானி புருஷ் ஆத்மாவிற்காக (நிஷ்சய்). உலகிய தொடர்பு சார்பானது (ரிலேடிவ்), ஆனால் ஆத்மா மெய்யானது. சார்பானதிற்கு குரு தேவை, அதே சமயம் மெய்யான ஒன்றிற்கு ஞானி புருஷ் தேவை.

## (7) மோட்சத்தின் தன்மை என்ன? தக்கவைத்து கொள்ள வேண்டிய ஒரே இலக்கு

**கேள்வி கேட்பவர்** : ஒருவரின் இலக்கு எதுவாக இருக்க வேண்டும்?

**தாதாஸ்ரீ** : மோட்சம் அடைவதற்காக மட்டுமே, அது மட்டும் தான் இலக்காக இருக்க வேண்டும். உங்களுக்கும் மோட்சம் வேண்டும், அல்லவா? இன்னும் எத்தனை காலம் இலக்கின்றி அலைந்து கொண்டிருக்க போகிறீர்கள்? கணக்கற்ற பிறவிகளில் இதை மட்டும் தான் செய்துள்ளீர்கள். நீங்கள் அலைந்து திரியாத இடமே இல்லை! நீங்கள் விலங்கு கதியில், மனித கதியில், தேவ கதியில், அலைந்து திரிந்து இருக்கிறீர்கள், இத்தகைய உலகியல் வாழ்வு அனைத்திலும் அலைந்து திரிவதைத் தவிர வேறு எதுவும் செய்யவில்லை. எதனால் அலைந்து திரிய வேண்டியதாயிற்று? ஏனெனில் "நான் யார்" என்பதற்கான விடை நீங்கள் அறியாததால் தான். உங்களின் மெய்யான சொரூபம் ஆத்மா என்று நீங்கள்

அறிந்திருக்கவில்லை. உங்களின் மெய்யான சொரூபம் ஆத்மா என்று நீங்கள் அறிய வேண்டும். நீங்கள் யார் என்று அறிந்து கொள்ள வேண்டாமா? இவ்வளவு அலைந்து திரிந்து, இருப்பினும் இதற்கு விடை அறியவில்லையா? பணம் சம்பாதிப்பது மட்டும் தான் வாழ்க்கையின் இலக்கா? மோட்சம் அடையும் நோக்கத்திற்காக ஓரளவு நீங்கள் முயற்சி செய்ய வேண்டாமா?

**கேள்வி கேட்பவர்** : செய்யப்பட வேண்டும்.

**தாதாஸ்ரீ** : எனவே சுதந்திரம் அடைய வேண்டிய அவசியம் இருக்கிறது, இல்லையா? ஆத்ம சொரூபத்தை தவிர மற்றவற்றைச் சார்ந்து எவ்வளவு காலம் நீங்கள் இருப்பீர்கள்?

**கேள்வி கேட்பவர்** : சுதந்திரம் அடைவது அவசியமில்லை ஆனால் சுதந்திரம் அடைவதற்கான புரிதல் அவசியம் என்று நான் நம்புகிறேன்.

**தாதாஸ்ரீ** : ஆம், அந்த புரித்ல அவசியம். அந்த புரிதல் கிடைத்துவிட்டால், அதுவே போதுமானது. நீங்கள் சுதந்திரம் அடையாவிட்டால் பரவாயில்லை, சுதந்திரம் அடைவது மற்றும் அடையாமல் இருப்பது, என்பது பிற்பாடானது. ஆனாலும் புரிதல் அவசியம், அல்லவா? முதலில் புரிந்து கொண்டுவிட்டால், அதுவே போதுமானது.

## தன்னியல்பான ஆத்மா சொரூப நிலைக்கு வர எந்த முயற்ச்சியும் தேவையில்லை.

மோட்சம் என்றால் ஒருவரின் தன்னியல்பான ஆத்ம சொரூப நிலைக்கு வருவது, அதே சமயம் உலக வாழ்க்கை என்றால் தனக்கு சொந்தமில்லாத ஒன்றைக் கொண்டு அடையாளப்படுத்திக் கொள்வது. எனவே எது எளிதானது? தன்னியல்பான ஆத்ம சொரூபமாக

நிலைத்திருப்பது. ஆகவே, மோட்சம் அடைவது கடினம் அல்ல. எப்பொழுதும் உலக வாழ்க்கையே கடினமானது. ஒப்பிடுகையில், மோட்சம் என்றது கிச்சடி (குஜராத்தின் ஒரு வகை உணவு (அரிசி மற்றும் பருப்பு சேர்ந்த எளிய உணவு) தயாரிப்பதை விட மிகவும் எளிதானது. கிச்சடி செய்வதற்கு மரக்கட்டைகளை தேட வேண்டும், அரிசி மற்றும் பருப்பு ஆகியவற்றை தேட வேண்டும், ஒரு சட்டியை தேடவேண்டும், தண்ணீரை தேட வேண்டும், இதைச் செய்ய பிறகு தான் கிச்சடி செய்ய முடியும். அதே சமயம், மோட்சம் என்றது கிச்சடி செய்வதை விட எளிதானது. எனினும், மோட்சம் அருளும், ஞானி கிடைக்கப் பெற வேண்டும். இல்லையெனில், மோட்சம் ஒரு போதும் அடைய முடியாது. பத்து மில்லியன் வருடங்கள் கடந்தாலும், மோட்சம் அடைய முடியாது. நீங்கள் எண்ணற்ற வாழ்வுகளை கடந்து வந்திருக்கிறீர்கள் அல்லவா?

கடின உழைப்பால் மோட்சம் அடைய முடியாது. "நாங்கள் கூறுகிறோம் அல்லவா, "'எங்களிடம்" வந்து மோட்சம் பெற்றுக் கொள்ளுங்கள்"! என்று. ஆனாலும், 'தன் பங்கில் எந்த ஒரு உழைப்பும் இல்லாமல் கிடைக்கும் மோட்சம், என்ன பயன் என்று மக்கள் நினைக்கிறார்கள்!' அப்படியானால் மிகவும் நல்லது, துணிந்து கடின உழைப்பின் மூலம் மோட்சம் அடையுங்கள். அவருடைய புரிதல் எவ்வளவு அற்புதமானது என்று பாருங்கள்! மற்றபடி, கடின உழைப்பினால் எதுவும் அடைய முடியாது. கடின உழைப்பால் யாரும் மோட்சம் அடைந்ததில்லை.

**கேள்வி கேட்பவர்** : மோட்சம் கொடுக்கவோ அல்லது எடுத்து கொள்ளவோ முடியுமா?

**தாதாஸ்ரீ** : அது கொடுக்க கூடியதோ அல்லது எடுத்துக்கொள்ள கூடியதோ இல்லை. அது

செயல்திறமுடைய ஆதாரத்தின் மூலம் கிடைக்கப் பெறுகிறது. நீங்கள் ‘எங்களை’ சந்தித்தது என்பதே ஒரு செயல்திறமுடைய ஆதாரம் (நிமித்) தான். செயல் திறமுடைய ஆதாரம் அவசியம் தேவை. மற்றபடி கொடுப்பவரும் இல்லை, எடுப்பவரும் இல்லை. கொடுப்பவராக கருதப்படுபவர் யார்? தனக்குச் சொந்தமான ஏதாவது ஒன்றைக் கொடுப்பவர் தான் கொடுப்பவராகக் கருதப்படுவார். இந்த விஷயத்தில், மோட்சம், உங்களுக்குள் உள்ளது, அதை நாங்கள் உங்களுக்குக் காண்பிக்க வேண்டும் மற்றும் அதை உங்களுக்கு உணர்த்த வேண்டும். எனவே, கொடுக்கல் வாங்கல் என்பது இல்லை, செயல்திறமுடைய ஆதாரம் மட்டும் தான் உள்ளது.

## மோட்சம் என்பது நிரந்தர பேரின்பம்

**கேள்வி கேட்பவர்** : மோட்சம் அடைவதினால் என்ன பயன்?

**தாதாஶ்ரீ** : சிலர் ‘எங்களை’ சந்திக்கும் போது “எனக்கு மோட்சம் வேண்டாம்” என்று ‘எங்களிடம்’ கூறுவார்கள். அதற்கு நான் அவர்களிடம் கூறுவது என்னவென்றால், “அன்பான தோழர்களே, உங்களுக்கு மோட்சம் தேவை இல்லாமல் இருக்கலாம் ஆனால் உங்களுக்கு மகிழ்ச்சி வேண்டுமா, இல்லையா? அல்லது நீங்கள் துன்பத்தை விரும்புகிறீர்களா? அதற்கு அவர்கள், “இல்லை, எங்களுக்கு மகிழ்ச்சி வேண்டும்” என்பார்கள். நான் அவர்களிடம் கேட்பேன் “உங்களுக்கு மகிழ்ச்சி குறைந்த அளவில் இருந்தால் போதுமா?” என்று, அதற்கு அவர்கள் “இல்லை, எங்களுக்கு முழுமையான மகிழ்ச்சி வேண்டும்” என்று பதிலளிப்பார்கள். அப்போது நான் அவர்களிடம் சொல்வேன், “நாம் மகிழ்ச்சியைப் பற்றி மட்டுமே பேசுவோம்! மோட்சம் பற்றிய சிந்தனையை விட்டு

விடுங்கள்” மோட்சம் என்றால் என்னவென்று மக்களுக்கு புரிவதில்லை. அவர்கள் வார்த்தையை மட்டுமே பயன்படுத்துகிறார்கள், அவ்வளவு தான். மோட்சம் என்ற பெயரில் ஒரு குறிப்பிட்ட இடம் இருப்பதாகவும் மற்றும் அங்கு சென்றால், மோட்சம் அனுபவிக்க முடியும் என்று மக்கள் நம்புகிறார்கள்! ஆனால், அது அப்படி அல்ல.

## மோட்சம் : இரண்டு நிலைகளில்.

**கேள்வி கேட்பவர்** : மோட்சம் என்பதின் வழக்கமான பொருள் வரையறை, பிறப்பு மற்றும் இறப்பு சுழற்சியில் இருந்து விடுபடுவது என்பதாகும்.

**தாதாஸ்ரீ** : ஆம், அது உண்மை தான். ஆனால், அது மோட்சத்தின் இறுதி நிலை, அது இரண்டாம் நிலை. முதல் நிலையில், முதல் மோட்சம் என்பதில் துன்பங்கள் இல்லாத (துன்பங்களுக்கு மத்தியில்) உலக வாழ்க்கை நிலவுவதை குறிக்கிறது. உலக வாழ்க்கையின் துன்பங்களுக்கு மத்தியிலும், ஒருவர் துன்பங்களால் பாதிக்கப்படாமல் இருப்பது, வெளிப்புறத்தில் இருந்து தூண்டப்பட்ட பிரச்சனைகளுக்கு (உபாதி) மத்தியில் பேரின்ப நிலை (சமாதி) நிலவுவது, அதுவே முதல் மோட்சம். அதன் பின் ஒருமுறை ஒருவர் உடலை விட்டு வெளியேறியவுடன் (நிரந்தரமாக), இறுதி மோட்சம் அடையப்பெறுகிறது. இருப்பினும், முதல் மோட்சம், இங்கே இப்போது நிகழ வேண்டும். ‘எங்களுக்கு’ மோட்சம் நிச்சயமாக நிகழ்ந்து விட்டது, அல்லவா! உலக வாழ்க்கையில் வாழ்ந்தாலும், ஒருவர் உலக வாழ்க்கையால் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும், அது போன்ற மோட்சம் நிகழந்து விட வேண்டும். இது அக்ரம் விஞ்ஞானத்தின் (ஆத்ம அனுபவத்தின் படியற்ற விஞ்ஞானம்) மூலம் சாத்தியமாகும்.

## வாழும் போது அனுபவிக்கும் முக்தி

**கேள்வி கேட்பவர்** : இப்போது இந்த முக்தி அல்லது மோட்சம் என்பது ஒருவர் வாழும் போது அனுபவிக்கப்படுகிற முக்தியா அல்லது இறந்த பிறகு ஏற்படுகிற முக்தியா?

**தாதாஸ்ரீ** : நீங்கள் இறந்த பிறகு, கிடைப்பதினால் என்ன பயன்? ஆனால் மக்களின் கருத்தான, நீங்கள் இறந்த பிறகு முக்தி அடைவீர்கள் என்று, கூறி உங்களை சிக்க வைக்கிறார்கள். ஹே, இங்கே ஏதாவது காட்டுங்கள்! அதன் சுவையை நான் அனுபவிக்க வேண்டுகிறேன், ஏதாவது ஆதாரத்தை எனக்கு காட்டுங்கள். அங்கே (இறந்த பிறகு) மோட்சம் அடைவார் என்று ஒருவர் எப்படி உறுதியாக இருக்க முடியும்? ‘கடனாக’ கிடைக்கப் பெறும் மோட்சத்தால் என்ன பயன்? ‘கடன் மீது’ கிடைக்கப் பெறும் மோட்சத்தால் எந்த பயனையும் பெற முடியாது. ‘ரொக்க கையிருப்பு’ இருப்பதே நல்லது. ஜனக மன்னன் (5000 கிமுவில், வாழ்ந்த இந்தியாவின் ஆன்மீக விழிப்புணர்வு பெற்ற அரசர், ஆத்ம சொரூபத்தில் நிலவிய படியே தனது அனைத்து அரச கடமைகளையும் மேற்கொண்டார்) முக்தியை அனுபவித்ததைப் போல, உலக வாழ்க்கை வாழும்போதே நீங்கள் இங்கு முக்தியை அனுபவிக்க வேண்டும். இதைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டு இருக்கிறீர்களா இல்லையா?

**கேள்வி கேட்பவர்** : நான் கேள்விப்பட்டு இருக்கிறேன்.

## (8) அக்ரம் பாதை என்றால் என்ன? அக்ரம் ஞானத்தின் மூலம் அசாதாரண ஆன்மீக - சக்திகள்

**கேள்வி கேட்பவர்** : சரி, இவ்வுலக வாழ்க்கை வாழும் போதே அவ்வளவு எளிதில் ஆத்ம ஞானம் அடைய முடியுமா?

**தாதாஸ்ரீ** : ஆம், அப்படி ஒரு வழி இருக்கிறது. உலக வாழ்க்கை வாழும் போது மட்டுமின்றி நீங்கள் உங்கள் மனைவியுடன் வாழ்ந்து கொண்டு இருந்தாலும் ஆத்ம ஞானம் பெற முடியும். உலக வாழ்க்கை வாழும் போது மட்டுமின்றி உங்கள் குழந்தைகளுக்கு திருமணமும் செய்து வைக்கலாம். அத்துடன் உலக பொறுப்புகள் அனைத்தையும் நிறைவேற்றிக் கொண்டே ஆத்ம ஞானம் பெற முடியும். நானும் இவ்வுலக வாழ்க்கையில் வாழ்ந்து கொண்டு தான் உங்களை ஆத்ம ஞானம் அடைய செய்கிறேன். உலக வாழ்க்கை வாழுவது என்றால், நான் உங்களுக்கு எல்லா சுதந்திரமும் தருகிறேன், நீங்கள் வெளியே சென்று திரைப்படம் பார்க்கலாம், உங்கள் மகனுக்கு திருமணம் செய்து வைக்கலாம், உங்கள் மகளுக்கு திருமணம் செய்து வைக்கலாம், அதற்கும் மேல் நீங்கள் அழகான ஆடைகளை அணிந்து கொள்ளுங்கள் (அவர்களுக்கு திருமணம் செய்து வைக்கும் போது) இதைத் தவிர உங்களுக்கு வேறு உத்திரவாதம் (உறுதி) வேண்டுமா?

**கேள்வி கேட்பவர்** : இத்தகைய அனைத்து சுதந்திரமும் இருந்தால் ஒருவர் நிச்சயமாக இதில் நிலவ முடியும்.

**தாதாஸ்ரீ** : அனைத்து சுதந்திரமும்! இது ஒரு அபூர்வமான பாதை, நீங்கள் கடினமான வேலை எதுவும் செய்ய வேண்டியதில்லை. 'நாங்கள்', உங்கள் கைகளில்

உங்களின் உண்மையான ஆத்ம சொரூபத்தை கொடுத்து விடுவோம், அதன் பிறகு, ஆத்ம சொரூபத்தில் நிலவிக் கொண்டு, 'லிப்டில்' (மின் தூக்கி) இருங்கள். 'நீங்கள்' வேறு எதுவும் செய்ய வேண்டிதில்லை. பிறகு நீங்கள் எந்த கர்மாவையும் பிணைத்துக் கொள்ள மாட்டீர்கள். நீங்கள் ஒரே ஒரு வாழ்க்கைக்கு மட்டுமே கர்மாவை பிணைப்பீர்கள், அதுவும் நீங்கள், எங்களின் ஆணைகளைப் (ஞானவிதிக்குப் பின் ஞான நிலையை நிலை நிறுத்துவதற்காக ஞானிப்புருஷரால் வழங்கப்பட்ட சிறப்புக்கட்டளைகள்) பின்பற்றுவதற்குட்பட்டது மட்டுமே. எங்களின் ஆணைகளில் நீங்கள் இருக்க வேண்டும் என்பதற்கான காரணம் என்னவென்றால், நீங்கள் லிப்டுக்கு வெளியே கையை நீட்டினால் பிரச்சனைக்குள்ளாகி விடுவீர்கள்!

**கேள்வி கேட்பவர்** : அப்படியென்றால் மேலும் ஒரு பிறவி எடுக்க வேண்டுமா?

**தாதாஸ்ரீ** : உங்களுக்கு பூர்வ ஜென்மம் இருந்தது மேலும் மறுபிறப்பும் இருக்கும். இந்த ஞானம் எப்படியென்றால் இன்னும் ஒன்று அல்லது இரண்டு பிறவிகள் மீதமிருக்கும். முதலில், தன்னை பற்றிய அறியாமையிலிருந்து முக்தி கிடைத்து விடுகிறது. பின்னர் ஒன்று அல்லது இரண்டு பிறவிகளுக்குப் பிறகு, இறுதி முக்தி அடையப்படுகிறது. காலச் சுழற்சியின் தற்போதைய சகாப்தத்தினால் இன்னும் ஒரு பிறவி மீதம் இருக்கும்.

எனவே ஒரு நாள் 'எங்களிடம்' வாருங்கள். 'நாங்கள் முடிவு செய்யும் நாளில் (ஞானவிதி பெற்றுக் கொள்வதற்கு) வாருங்கள். அந்த நாளில், 'நாங்கள்' அனைவரின் 'கயிற்றை' வெட்டி விடுகிறோம். 'நாங்கள்' தினந்தோறும் வெட்டமாட்டோம். இல்லையெனில், 'நாங்கள்' ஒரு புதிய கத்தியை வாங்க செல்ல வேண்டியிருக்கும். சாதாரண நாட்களில், (தினந்தோறும்) சத்சங்கம் (கேள்வி

பதில் வடிவத்தில் நடத்தப்படும் ஆன்மீக சபை) இருக்கும். ஆனால் முடிவு செய்த நாளில் 'நாட்கள்' உடனடியாக 'கயிற்றின்' 'முடிச்சை' துண்டித்து விடுகிறோம். வேறொன்றுமில்லை. பின்னர் இவை அனைத்தும் விடுவிக்கப்பட்டதை நீங்கள் உடனடியாக உணருவீர்கள். கட்டிவைக்கப்பட்ட ஒருவர், தான் விடுவிக்கப்பட்டதை அனுபவித்தார் என்றால் அவர் உடனடியாக கூறுவார் "நான் விடுவிக்கப்பட்டேன்" என்று. எனவே சுதந்திரமாகி விட்ட உணர்வை உணர வேண்டும். சுதந்திரம் அடைவது பொய்யானது அல்ல. எனவே 'நாங்கள்' உங்களை விடுவிக்கிறோம்.

இந்த ஞானத்தை 'நாங்கள்' வழங்கும் அந்நாளில் ஒருவருக்கு என்ன நிகழ்கிறது? ஒருவரின் தீய கர்மா ஞான அக்னியில் முற்றிலும் அழிந்து விடுகிறது. இரண்டு வகையான கர்மாக்கள் அழிக்கப் படுகின்றன. மேலும் ஒருவகை கர்மா இருக்கிறது. நீராவி வடிவில் இருக்கும் கர்மாக்கள் அழிந்து விடுகின்றன மற்றும் நீர் வடிவில் இருக்கும் கர்மாக்களும் அழிந்து விடுகின்றன. ஆனால் பனிகட்டி வடிவில் இருக்கும் கர்மாக்கள் அழிந்து போவதில்லை. ஏனென்றால், இந்த கர்மாக்கள் திடமாகி விட்டன, அவை பலனைத் தர தயாராக உள்ளன, எனவே அவை விட்டு போவதில்லை. இருப்பினும், ஞான அக்னி, நீர் மற்றும் நீராவி வடிவில் இருக்கும் கர்மாக்களை அழித்து விடுகிறது. அதனால் தான் ஞானம் பெற்றவுடன் மக்கள் மிகவும் லேசாக உணர்கிறார்கள், விழிப்படைந்த விழிப்பு நிலை (ஜாக்ருதி) உடனடியாக அதிகரித்து விடும். ஏனெனில், கர்மாக்கள் அழியாத வரை, விழிப்படைந்த விழிப்பு நிலை ஒருவருக்கு அதிகரிக்காது! பனிகட்டி வடிவில் இருக்கும் கர்மாக்களை அனுபவிக்க வேண்டி இருக்கும். இருப்பினும், அவற்றை எப்படி சுலபமாக்கி அனுபவித்து, என்பதற்குரிய அனைத்து வழிமுறைகளையும்

‘நாங்கள்’ சொல்லி இருக்கிறோம், அவை எப்படியெல்லாம் என்றால், தாதா பகவான் நா அசீம் ஜெய் ஜெய்கார் ஹோ” (என்னுள் இருக்கும் தாதாபகவான் அவர்களின் எல்லையற்ற புகழை போற்றி வணங்குகிறேன்) பாடுவது, த்ரிமந்திரம் சொல்வது (வாழ்க்கையின் அனைத்து தடைகளையும் அழிக்கும் மூன்று மந்திரங்கள்) மற்றும் நவ கலமோ சொல்வது (உயர்ந்த ஆன்மீக நோக்கங்களுக்காக நம் உள் இருக்கும் சுத்தாத்மாவிடம் சக்தி கேட்பதற்காக ஒன்பது வாக்கியங்கள்)

‘நாங்கள்’ ஞானம் (ஆத்மாவை பற்றிய ஞானம்) வழங்கும் போது, உங்களின் கர்மா முற்றிலும் அழிந்துவிடுகிறது, மேலும் அச்சமயத்தில், ஆத்மாவின் மீது இருக்கும் பல அறியாமைத் திரைகள் (ஆவரன்) முறிந்து விடுகிறது. அப்போது, பகவானின் அருளால், ஒருவர் (தான் அத்மா என்கிற) விழிப்படைகிறார். ஆத்மாவாக விழிப்படைந்தவுடன், அந்த விழிப்படைந்த விழிப்பு நிலை (ஜாக்ருதி) விலகுவதில்லை. பின்னர், எப்போதும் விழிப்புடன் இருக்க முடியும். எனவே, ‘நான் சுத்தாத்மா’ என்ற நிர்ணயம் (ப்ரதிதி) நிச்சயமாக இடைவிடாமல் நிலைக்கும். நிர்ணயம் எப்போது நிலவும்? விழிப்படைந்த விழிப்பு நிலை இருந்தால், நிர்ணயம் நிலைத்திருக்கும். முதலில் விழிப்படைந்த விழிப்பு நிலை ஏற்படுகிறது. அதன்பின் நிர்ணயம் உண்டாகிறது. எனவே, அனுபவம் (அனுபவ்) நிறுவப்பட்ட விழிப்பு நிலை (லக்ஷ்) மற்றும் ஆத்மா என்ற நிர்ணயம் (ப்ரதிதி), இந்த மூன்றும் நிலைபெறுகிறது. நிர்ணயம் எப்போதும் இருக்கும். நிறுவப்பட்ட விழிப்பு நிலை சில நேரங்களில் இருக்கும். நாம் ஏதாவது வேலையில் ஈடுபடும் போது, நிறுவப்பட்ட விழிப்பு நிலையில் இருக்க தவறிவிடலாம் ஆனால் வேலையிடையே சிறிது நேரம் இடைவேளை கிடைத்தவுடன், நிறுவப்பட்ட விழிப்பு நிலையில் மீண்டும்

நாம் வந்துவிடுவோம். ஒருவர் வேலையிலிருந்தும், மற்ற அனைத்து கடமைகளிலிருந்தும் விடுபட்டு தனிமையில் அமர்ந்திருக்கும் போது தான், ஆத்மாவாக அனுபவம் ஏற்படுகிறது, அப்போது தான் அந்த அனுபவம் உணரப்படும். நினைவில் கொள்ளுங்கள், அனுபவம் கண்டிப்பாக அதிகரித்துக் கொண்டு தான் இருக்கும். ஏனென்றால், சந்தூபாய் முன்பு எப்படி இருந்தார், இன்று எப்படி இருக்கிறார் என்பதை கொண்டு புரிந்து கொள்ளலாம். எதனால் இந்த மாற்றம்? அதற்கு காரணம் ஆத்ம அனுபவம் தான். முன்பு, 'நான் இந்த உடல்', என்ற அனுபவம் இருந்தது, ஆனால் இப்போது, ஆத்மாவாக அனுபவம் உள்ளது.

**கேள்வி கேட்பவர் :** ஆத்மாவின் அனுபவம் ஏற்பட்டுவிட்டது என்றால் என்ன ஆகும்?

**தாதாஸ்ரீ :** ஆத்மாவின் அனுபவம் ஏற்பட்டுவிட்டது என்றால் 'நான் இந்த உடல்' என்ற புரிதல் விலகிவிடுகிறது. இந்த புரிதல் விலகிவிடும் போது, புதிய கர்மாவின் பிணைப்பு நின்று விடுகிறது. புதிய கர்மாவின் உட்புகுதலில் இருந்து விடுபட்ட நிலை (சம்வர்) நிலவுகிறது. இதைவிட ஒரு நபருக்கு வேறு என்ன வேண்டும்?

## ஆத்மா மற்றும் அனாத்மா இடையிலான எல்லைக்கோடு

இது அக்ரம் விஞ்ஞானம், ஆகையால் சம்கித் (நான் சுத்தாத்மா என்கிற சரியான புரிதல்) இவ்வளவு குறுகிய நேரத்தில் அடையப்படுகிறது. மாறாக க்ரமிக் பாதையில் சம்கித் அடைவது தற்போது சாத்தியமில்லை. இந்த அக்ரம் விஞ்ஞானம் உண்மையில் மிகவும் உயர்வான விஞ்ஞானம் ஆகும். ஆத்மா மற்றும் அனாத்மாவிற்கு இடையேயான பிரிவை 'நாங்கள்' உருவாக்குகிறோம், அதவாது உங்களுடையது மற்றும்

உங்களுடையது அல்லாததற்கு இடையேயான பிரிவினை உருவாக்குவது. எந்த பாகம் உங்களுடையது, எந்த பாகம் உங்களுடையது அல்ல என்பதை தெளிவுபடுத்துகிற எல்லைக்கோட்டை 'நாங்கள்' உருவாக்குகிறோம். அதன் பிறகு, பக்கத்து வீட்டு பண்ணையின் காய்கறிகளை நாம் உண்ணக்கூடாது, அல்லவா!

## க்ரமிக் பாதை மற்றும் அக்ரம் பாதை

தீர்த்தங்கரர்களின் ஞானம் (மற்றவர்களை விடுவிக்க கூடிய முழுமையான ஞானம்அடைந்த பகவான்) என்பது க்ரமிக் ஞானம் (ஆத்ம நிலையை அடைவதற்காக, வழக்கமான படிப்படியான பாதையின் மூலம் அடைய பெறுகிற ஞானம்). க்ரமிக் என்றால் ஒவ்வொரு படியாக ஏறுவது. ஒருவர் தனது (பரிக்ரஹத்தை) உலக உடமைகளை அடையும் தன்மை குறைத்துக் கொள்ளும்பொழுது, அவர் மோட்சத்தை நோக்கி முன்னேறுகிறார். இதற்கு எண்ணற்ற வாழ்நாள் ஆகலாம். ஆனால் இந்த அக்ரம் விஞ்ஞானம் என்றால் என்ன? படிகள் ஏற வேண்டிய அவசியமில்லை. ஒருவர் லிப்டின் (மின்தூக்கி) உள் சென்று பன்னிரெண்டாவது மாடிக்குச் செல்ல வேண்டும். இது ஒரு விதமான 'லிப்ட்' பாதை தோன்றி இருக்கிறது. எனவே, லிப்டில் நுழைபவர் யாராக இருந்தாலும் மோட்சம் அடைவார். 'நாங்கள்' வெறும் செயல்திறமுடைய கருவி (நிமித்) மட்டும் தான். இந்த 'லிப்டில்' நுழைபவர் யாராக இருந்தாலும் இறுதி தீர்வை அடைந்து விடுவார்! இறுதி தீர்வைக் கொண்டு வர வேண்டும், அல்லவா? லிப்டில் நுழைந்தவுடன் நீங்கள் உண்மையிலேயே மோட்சம் அடைய போகிறீர்கள் என்ற உறுதி உங்களுக்கு இருக்க வேண்டும் அல்லவா? அதன் உறுதி என்னவென்றால் கோபம், பெருமை, கபடம் மற்றும் பேராசை தோன்றாது, ஆர்த்ததியான் (தன்னைத்

துன்பப்படுத்தும் பாதகமான உள்நிலை) அல்லது ரௌத்ரதியான் (தன்னை மற்றும் பிறரை துன்பப்படுத்தும் பாதகமான உள் நிலை) தோன்றாது. எனவே, ஆன்மீகப் பணி முழுவதுமாக முடிந்துவிட்டது, அல்லவா?

## ‘எங்களை’ சந்திப்பவர் தகுதியானவரே

**கேள்வி கேட்பவர்** : இந்த பாதை மிகவும் எளிதாக்கப் பட்டுள்ளது, அப்படியானால் எங்களுக்கு எந்த தகுதியும் இருக்க தேவையில்லையா? யாராக இருந்தாலும் அனுமதி உண்டா?

**தாதாஸ்ரீ** : சிலர் ‘எங்களிடம்’ கேட்கிறார்கள், “நான் தகுதியானவனா (இந்த ஞானம் பெறுவதற்கு)?” என்று, அதற்கு நான் அவர்களிடம் கூறுவது என்னவென்றால், “நீங்கள் ‘எங்களை’ சந்தித்தீர்கள், என்பதனால் நீங்கள் தகுதியானவர்,” உண்மையில், நாம் சந்தித்ததின் பின்னணியில் அறிவியல் சூழ்நிலை ஆதாரங்கள் உள்ளன. எனவே பின்னணியில், ‘எங்களை’ சந்திக்கும் யாரொருவரும் தகுதியானவராக கருதப்படுகிறார். ‘எங்களை’ சந்திக்காதவர்கள் தகுதியற்றவர்கள்! ஒருவர் ‘எங்களை’ சந்திப்பதற்கு என்ன காரணம்? ஒருவர் தகுதியானவர் என்பதால் தான், அவர் ‘எங்களை’ சந்திக்கிறார். ‘எங்களை’ சந்தித்த போதிலும், ஒருவர் (ஆத்ம ஞானம்) அடையவில்லை என்றால், அது அவருடைய (அந்த்ராய கர்மா) தடைகளை உருவாக்கும் கர்மா, அவரைத் தடுக்கிறது.

## க்ரமிக் பாதையில், ஒருவர் செய்ய வேண்டும், ஆனால் அக்ரமில்....

ஒருமுறை, ஒரு மனிதர் கேட்டார், “க்ரமிக் மற்றும் அக்ரம் பாதைக்கு என்ன வித்தியாசம்?” என்று. அதற்கு நான் பதிலளித்தேன், “க்ரமிக் பாதையில், தீய

செயல்களை விட்டுவிட்டு, நல்ல செயல்களைச் செய்ய வேண்டும்” என்று எல்லோரும் கூறுகிறார்கள். அனைவரும் அதே விஷயத்தை கூறுகிறார்கள், அது தான் க்ரமிக் பாதை. க்ரமிக் என்றால், எல்லாவற்றையும் துறந்து, கபடத்தையும், பேராசையையும் விட்டுவிட்டு, நல்ல காரியங்களை செய்ய வேண்டும் என்று அவர்கள் கூறுகிறாாகள். இதுவரை நீங்கள் செய்து கொண்டு இருந்தது இதுவே அல்லவா?

அதே சமயம் அக்ரம் என்றால், ‘செய்ய வேண்டியது’ எதுவும் இல்லை. ‘நான் செய்கிறேன்’ (கரோமி) ‘நீங்கள் செய்கிறீர்கள்’ (கரோசி), மற்றும் ‘அவர்கள் செய்கிறார்கள்’ (கரோதி), அப்படி எதுவும் இல்லை! அக்ரம் பாதையில், ஒருவருக்கு ஜேப்படி திருட்டு நடந்துவிட்டால், அதற்கு அவர் என்ன சொல்வார் என்றால், “‘அவர்’ (ஜேப்படி திருடனின் ஆத்மா) ஜேப்படி செய்யவில்லை, மேலும் ‘எனது’ (ஆத்மாவின்) ஜேப்படி திருடப்படவில்லை” என்பார், ஆனால் க்ரமிக் பாதையில், ஒருவர் என்ன சொல்வார் என்றால், “அவர் ஜேப்படி திருட்டு செய்தார், எனது ஜேப்படி திருடப்பட்டது,” என்பார்.

அக்ரம் விஞ்ஞானம் என்பது லாட்டரி போன்றது. லாட்டரி மூலம் பெறும் பரிசுக்காக, ஒருவர் என்ன முயற்சி செய்ய வேண்டும்? அவர் ஒரு ரூபாய் செலவழித்தார், மற்றவர்களும் ஒரு ரூபாய் செலவழித்தனர் (லாட்டரி சீட்டை வாங்குவத்கு), ஆனால் அவர் அதிர்ஷ்டமுள்ளவராகி விட்டார். அதுபோலவே, இந்த அக்ரம் விஞ்ஞானம், உடனடியாக, விரைவில் மோட்சம் வழங்குகிறது.

## அக்ரம் மூலம் அடிப்படை மாற்றங்கள்.

அக்ரம் விஞ்ஞானம் ஒரு அற்புதமான அதிசயம். இந்த ஞானம் அடைந்த பிறகு, ஒருவர் அடுத்த நாளே குறிப்பிடத்தக்க மாற்றத்தை உணர்கிறார். இதை மட்டும் கேட்டவுடன், மக்கள் நம்பிக்கை அடைந்து, இந்த பாதைக்கு ஈர்க்கப்படுகிறார்கள்.

## அக்ரம் பாதை உலகம் முழுவதும் பரவட்டும்.

இது ஒருமிகப் பெரிய சூழ்நிலை, இது போன்ற ஒன்று எங்கும் நடந்ததில்லை, ஒரே ஒரு நபர், தாதா அவர்களால் மட்டுமே, இதை சாதிக்க முடியும். வேறு யாராலும் முடியாது.

**கேள்வி கேட்பவர்** : அதன் பிறகு, தாதா அவர்களின் அருள் செயல்படும், இல்லையா?

**தாதாஶ்ரீ** : அது தொடர்ந்து இருக்கும். அதற்கு யாராவது ஒருவர் தயாராக வேண்டும் என்பது எனது விருப்பம், இந்த பாதை தொடருவதற்கு யாராவது தேவைப்படுவார்கள், இல்லையா?

**கேள்வி கேட்பவர்** : ஆம், தேவைப்படும்!

**தாதாஶ்ரீ** : எனினும், எனது விருப்பம் நிறைவேறிவிடும்.

**கேள்வி கேட்பவர்** : இந்த அக்ரம் விஞ்ஞானம் தொடர வேண்டும் என்றால், ஒரு நிமித் (ஒரு செயல்பாட்டில் செய்பவராக வெளிப்படுகிற கருவி)!

**தாதாஶ்ரீ** : ‘அக்ரம் விஞ்ஞானம்’ தான் தொடரும். ஓரிரு வருடங்கள் இப்படியே தொடர்ந்து நீடித்தால். உலகம் முழுவதும் அக்ரம் விஞ்ஞானத்தைப் பற்றி மட்டுமே பேசிக் கொண்டிருக்கும், மேலும் எல்லா இடங்களுக்கும் சென்று

அடையும். பொய்க் கதைகள் எப்படி ஊராரின் முக்கிய பேச்சாகிறதோ, அதே போல சரியான தகவல்களும் ஊராரின் முக்கிய பேச்சாகும். சரியான தகவல் நடைமுறைக்கு வர அதிக நேரம் ஆகும், அதே சமயம் தவறான தகவல்கள் உடனடியாக நடைமுறைக்கு வந்துவிடும்.

## அக்ரம்மூலம், பெண்களுக்கும் மோட்சம் உண்டு.

மக்கள் கூறுவார்கள், "ஆண்கள் மட்டுமே மோட்சம் அடைய முடியும், பெண்கள் மோட்சம் அடைய முடியாது" என்று. ஆனால் நான் அவர்களிடம் சொல்வேன், "பெண்களும் மோட்சம் அடையலாம், ஏன் அவர்களால் முடியாது? என்று. அதற்கு அவர்கள் கூறும் பதில் என்னவென்றால், "பெண்களின் கபடம் (கபட்) மற்றும் மாய ஈர்ப்பு (மோஹம்) முடிச்சுகள் மிகப் பெரியவை. ஒரு ஆணின் முடிச்சு இவ்வளவு சிறிய முடிச்சாக இருக்கிறது என்றால் பெண்ணின் முடிச்சு சேனைக் கிழங்கை போன்று பெரியது!"

பெண்களும் மோட்சம் அடைவார்கள். பெண்கள் மோட்சம் அடைய முடியாது என்று எல்லோரும் சொன்னாலும், பெண்கள் மோட்சம் அடைவதற்கு தகுதியானவர்கள். இதற்கு காரணம் அவள் ஆத்மா தான் மற்றும் ஆண் ப்ருக்ருதி (தர்சார்பு ஆத்மாவின் இயல்பான பண்புகளும் தன்மைகளும்) தொடர்பில் (பழக்க முள்ளவளாக) இருக்கிறாள், அதனால் அவளுக்கும் தீர்வு உண்டாகும். இருப்பினும், பெண்ணின் ப்ரக்ருதியில் மாய ஈர்ப்பு மிகவும் வலுவாக உள்ளதால், அதிக நேரம் ஆகும்!

## உங்கள் ஆன்மீகப் பணியை நிறைவேற்றி கொள்ளவும்

இங்கு, உங்களுக்கு தேவைப்படும் போது உங்கள் ஆன்மீகப் பணியை நிறைவேற்றி கொள்ளவும். கட்டாயமாக இங்கு வர வேண்டும் என்று இல்லை. உங்களுக்கு வர விருப்பம் இருந்தால் இங்கு வாருங்கள்! மேலும், நீங்கள் உலக வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவித்தால், அதை உங்களால் பொறுத்துக் கொள்ள முடிகிறது என்றால், அந்த 'வியாபாரத்தையே' தொடருங்கள். நீங்கள் இதைச் செய்ய வேண்டும் அல்லது அதைச் செய்ய வேண்டும் என்று 'எங்கள்' தரப்பில் இருந்து எதுவும் இல்லை. (உங்களை வருமாறு அழைப்பு விடுக்க) நீங்கள் உங்களுக்கு கடிதம் எழுதவும் மாட்டோம். நீங்கள் இங்கு வந்திருந்தால், 'நாங்கள்' உங்களிடம் சொல்வோம், "அன்பான தோழரே, இதை (ஞானத்தை) பயன்படுத்திக் கொள்ளுங்கள்" என்று. அவ்வளவு தான் 'நாங்கள்' சொல்வோம். இத்தகைய விஞ்ஞானம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வெளிப்படவில்லை. அதனால் தான் 'நாங்கள்' கூறுகிறோம், "பிற்காலத்தில் எது நடக்க இருக்கிறதோ, அப்படியே ஆகட்டும், ஆனால் உங்கள் ஆன்மீகப் பணியை நிறைவேற்றி கொள்வது மதிப்புக்குரியது".

## (9) ஞானி புருஷ் என்பவர் யார்?
## சந்த் புருஷ் மற்றும் ஞானி புருஷ்

**கேள்வி கேட்பவர் :** இந்த புதினர்களுக்கும் (சந்த்), ஞானி புருஷ் அவர்களுக்கும் இடையே என்ன வித்தியாசம்?

**தாதாஸ்ரீ :** புனிதராக கருதப்படுபவர் யார்? ஒரு புனிதர் என்பவர் மற்றவர்களுக்கு, அவர்களின் பலவீனங்களை விட்டுவிட்டு நல்ல விஷயங்களை ஏற்றுக் கொள்ள

கற்றுக்கொடுப்பவர், தீய செயல்கள் செய்வதை விட்டு விட்டு, நல்ல செயல்களைச் செய்ய மற்றவர்களுக்கு, அவர்கள் கற்றுக் கொடுக்கிறார்கள்.

**கேள்வி கேட்பவர் :** அப்படியானால், நாம் தீய கர்மா (பாவ கர்மா) பிணைத்துக் கொள்ளாமல் இருக்க, நம்மை மீட்பவர் புனிதரா?

**தாதாஸ்ரீ :** ஆம், தீய கர்மா (பாவ கர்மா) பிணைப்பதிலிருந்து மக்களை மீட்பவர் தான் புனிதர். இருப்பினும், பாவ கர்மா (தீய கர்மா) மற்றும் புண்ணிய கர்மா, இரண்டிலிருந்து மக்களை மீட்பவரை ஞானி புருஷ் என்று அழைக்கப்படுகிறார்.

ஒரு புனிதர் மக்களை சரியான பாதைக்கு வழி நடத்துகிறார், அதே சமயம், ஞானி புருஷ் மக்களை முக்தி அடைய செய்கிறார். புனிதர்கள் ஒரு வழியை பின்பற்றுகிறார்கள். அவர்கள் ஒரு வழியை பின்பற்றுவது மட்டுமில்லாமல் வேறு வழியை பின்பற்றும் மற்றவர்களையும் "நீங்கள் வாருங்கள், என்னுடன்" என்று கூறுவார்கள். ஆனால், ஞானி புருஷ் என்பவர் இறுதி நிலையமாகக் கருதப்படுகிறார், உங்கள் ஆன்மீகப் பணியை நிறைவேறச் செய்வதற்கு அவர் உங்களுக்கு உதவுவார்.

உண்மையான புனிதர் யார்? 'எனது - தன்மை' (மம்தா) இல்லாத ஒருவர் மற்றவர்களுக்கு வெவ்வேறு அளவுகளில் 'எனது - தன்மை' உள்ளது. உண்மையான ஞானி யார்? 'அஹங்காரம் (அஹங்கார்) மற்றும் 'எனது - தன்மை' இல்லாத ஒருவர்.

எனவே, புனிதர்கள், ஞானி புருஷ் அவர்களுக்கு இணையானவர்கள் அல்ல. புனிதர்களுக்கு ஆத்மாவை பற்றிய விழிப்பு இருப்பதில்லை. அந்த புனிதர்கள் ஞானி

புரூஷ் அவர்களை சந்திக்கும் போது அவர்கள் இறுதியான தீர்வை அடைவார்கள். இது புனிதர்களுக்கும் தேவை. எல்லோரும் இங்கே வர வேண்டும், வேறு வழியில்லை, இல்லையா! எல்லோருக்கும் இந்த ஆசை இருக்கிறது.

ஞானி புரூஷ் உலக அதிசயமாக கருதப்படுகிறார். ஞானி புரூஷ் எரியும் விளக்காக கருதப்படுகிறார்.

## ஞானி புரூஷ் அவர்களை அடையாளம் கண்டு கொள்வது

**கேள்வி கேட்பவர் :** ஞானி புரூஷ் அவர்களை எப்படி அடையாளம் காண முடியும்?

**தாதாஶ்ரீ :** அவரை எப்படி அடையாளம் காண்பது? ஞானி புரூஷ் என்பவரை எளிதில் அடையாளம் கண்டு கொள்ள முடியும் 'அவரது' நறுமணமே அடையாளம் காட்டக் கூடியதாக இருக்கும். அவரைச் சுற்றியுள்ள சூழல் முற்றிலும் தனித்துவமானது! 'அவரது' பேச்சு முற்றிலும் தனித்துவமானது! அவரது வார்த்தைகளால் 'அவரை' அடையாளம் காண முடியும். ஓ, அவரது கண்களை பார்த்தே அவரை அடையாளம் கண்டு கொள்ள முடியும். மற்றபடி, ஞானி புரூஷ் அவர்கள் நிறைய உறுதியளிக்கிறார், மிகப் பெரிய உறுதி! மேலும் அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் புரிந்து கொள்ளப்பட்டால் அது வேத வடிவில் இருக்கும். அவருடைய பேச்சு, செயல் மற்றும் பணிவு மக்கள் மனதை வெல்லுவதாக இருக்கும், அவை மனதை வயப்படுத்துவதாக இருக்கும். எனவே, அவர் பல குணாதிசயங்களைக் கொண்டுள்ளார்.

ஞானி புரூஷ் அவர்களிடம் ஒரு துளி கூட புத்தி இருக்காது! அவர் புத்திக்கு அப்பாற்பட்டவர் (அபுத்). இந்த

காலத்தில், ஒரு துளி கூட புத்தி இல்லாதவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? அப்படி ஒருவர் பிறப்பது மிகவும் அரிது, எப்போதாவது அப்படி ஒருவர் பிறந்தால், அப்போது மக்கள் முக்தி அடைந்து விடுவார்கள். அவர் மூலம், இலட்சக்கணக்கான மக்கள், உலக வாழ்வு எனும் பெருங்கடலை நீந்திக் கடந்து மோட்சம் அடைந்து விடுவார்கள், ஞானி புருஷ அஹங்காரம் இல்லாதவர், அவரிடம் சிறிதளவு அஹங்காரம் கூட இருக்காது. இவ்வுலகில் அஹங்காரம் இல்லாமல் யாரும் இருக்கமாட்டார்கள். ஞானி புருஷ் மட்டும் தான் அஹங்காரம் இல்லாதவர்.

ஞானி புருஷ் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு ஒரு முறை தோன்றுவார், அதே சமயம் ஏராளமான புனிதர்கள் மற்றும் வேத வல்லுநர்கள் இருப்பார்கள். இங்கு (இந்தியாவில்) ஏராளமான வேத ஞானிகள் (வேதங்களின் ஞானம் பெற்றிருப்பவர்) இருக்கிறார்கள். ஆனால் ஆத்ம ஞானிகள் (ஆத்ம ஞானம் பெற்றிருப்பவர்) இருப்பது இல்லை. ஆத்ம சொரூபத்தை அறிந்த ஞானி பரமானந்தமாக இருப்பார். மேலும் சிறிதளவு கூட எந்த துன்பமும் இருக்காது. அதனால் தான் உங்கள் மோட்சம் அவர் மூலம் நிகழ்கிறது. தனது மோட்சத்தை அடைந்து விட்டவர் தான் உங்களுக்கு மோட்சத்தை வழங்கச் செய்ய முடியும் (உலக வாழ்வு என்னும் ‘பெருங்கடலை’) கடந்தவர், உங்களை கடக்க உதவுவார். இல்லையெனில், அவரே மூழ்கிவிடாமல் மிதப்பதற்காகப் போராடிக் கொண்டிருந்தால், மற்றவர்களை கரையேற்ற அவரால் ஒரு போதும் உதவ முடியாது.

# (10) தாதா பகவான் யார்?
# 'நான்' மற்றும் 'தாதா பகவான்' ஒன்றல்ல

**கேள்வி கேட்பவர்** : அப்படியென்றால், ஏன் நீங்கள் உங்களை பகவான் என்று அழைக்க அனுமதிக்கிறீர்கள்?

**தாதாஸ்ரீ** : 'நாங்கள்' பகவான் அல்ல. உண்மையில், நாங்கள் தாதா பகவானை வணங்குகிறோம். இங்கு காணப்படுபவர் தாதா பகவான் அல்ல. 'நாங்கள்' (ஆன்மீக முன்னேற்றத்தில்) முந்நூற்று ஐம்பத்தாறு டிகிரியில் இருக்கிறோம், அதே சமயம் தாதா பகவான் முந்நூற்று அறுபது டிகிரியில் இருக்கிறார். 'நாங்கள்' நான்கு டிகிரி குறைவாக இருக்கிறோம், அதனால் தான் 'நாங்களும்' தாதா பகவானை வணங்குகிறோம்.

**கேள்வி கேட்பவர்** : ஏன் அப்படி செய்கிறீர்கள்?

**தாதாஸ்ரீ** : ஏனெனில், 'நாங்கள்' மீதமுள்ள நான்கு டிகிரியை பூர்த்தி செய்ய விரும்புகிறோம். 'நாங்கள்' அவற்றை பூர்த்தி செய்ய வேண்டும், இல்லையா? 'நாங்கள்' நான்கு டிகிரி குறைவாக இருக்கிறோம், 'நாங்கள்' தோல்வியடைந்து விட்டோம், ஆனால் இரண்டாவது முறை தேர்ச்சி பெறுவதைத் தவிர எங்களுக்கு வேறு ஏதேனும் வழி இருக்கிறதா?

**கேள்வி கேட்பவர்** : உங்களுக்கு பகவான் ஆக வேண்டும் என்ற ஆசை இருக்கிறதா?

**தாதாஸ்ரீ** : பகவான் ஆவதை, உண்மையில் 'நாங்கள்' மிகவும் சுமையானதாக காண்கிறோம். 'நாங்கள்' மிக்க பணிவான (லகுதம்) மனிதர். என்னைவிட மிக பணிவானவர் இவ்வுலகில் யாரும் இல்லை, 'நாங்கள்' தான் மிக்க பணிவான மனிதர். அதனால், பகவான் ஆவது என்பதை

'நாங்கள்' சுமையானதாக காண்கிறோம், மாறாக 'நாங்கள்' கூச்சப்படுகிறோம்.

**கேள்வி கேட்பவர் :** நீங்கள் பகவான் ஆக விரும்பவில்லை என்றால், பிறகு ஏன் நீங்கள் நான்கு டிகிரியை முடிப்பதற்கான முயற்றி செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ :** அது எதனால் என்றால் 'நாங்கள்' மோட்சம் அடைவதற்கு. பகவான் ஆகிவிட்டு 'நாங்கள்' என்ன பெறப் போகிறோம்? பகவானைப் போன்ற பண்புகள் உடைய எவரும் பகவான் ஆக முடியும். பகவான் என்பவர் தெய்வீக குணங்களை கொண்டவர், பகவான் போன்ற குணங்கள் உடைய எவரும் பகவான் ஆக முடியும். பகவான் என்பது ஒரு உருவக சொல். இத்தகைய குணங்கள் யாரிடம் இருக்கிறதோ அவரை மக்கள் சந்தேகத்திற்கு இடமின்றி பகவான் என்று குறிப்பிடுவார்கள்.

## பதினான்கு உலகங்களின் அதிபதி இங்கு தோன்றி இருக்கிறார்.

**கேள்வி கேட்பவர் :** 'தாதா பகவான்' என்ற வார்த்தை யாருக்காக பயன்படுத்தப்பட்டு இருக்கிறது?

**தாதாஸ்ரீ:** அது தாதா பகவானுக்காக பயன்படுத்தப்படுகிறது, எனக்காக அல்ல, உண்மையில் 'நாங்கள்' ஞானி புருஷ்.

**கேள்வி கேட்பவர் :** எந்த பகவான்?

**தாதாஸ்ரீ :** தாதா பகவான், பதினான்கு உலகங்களுக்கு அதிபதியாக இருப்பவர். 'அவர்' உங்களுக்குள்ளும் வசிக்கிறார், ஆனால், இன்னும் அவர் உங்களுக்குள் வெளிப்படவில்லை. 'அவர்' உங்களுக்குள் வெளிப்படுத்தப் படாத நிலையில் இருக்கிறார், அதே சமயம் 'அவர்' எனக்குள் வெளிப்பட்டிருக்கிறார். வெளிப்பட்டிருப்பவர்,

உங்களுக்கு பலன்களை தரக்கூடியவர். அவருடைய பெயரை நீங்கள் ஒருமுறை சொன்னாலே பலன் அடைவீர்கள். இருப்பினும், நீங்கள் அவருடைய பெயரை சரியான புரிதலுடன் சொன்னால், நீங்கள் மோட்சம் அடைவீர்கள், மேலும் உங்களுக்கு ஏதேனும் உலகக் கஷ்டங்கள் இருந்தால், அதுவும் விலகிவிடும். இருப்பினும், நீங்கள் இந்த விஷயத்தில், பேராசை கொள்ளக் கூடாது. அப்படி நீங்கள் பேராசை கொண்டால், அதற்கு முடிவே இருக்காது. தாதா பகவான் யார் என்று புரிந்ததா?

இங்கு காணப்படுபவர் தாதா பகவான் அல்ல. உங்கள் முன் இருப்பவர் தாதா பகவான் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள், இல்லையா? எனினும், நீங்கள் இங்கு பார்ப்பவர் பாத்ரன் (இந்தியாவில் உள்ள குஜராத், மாநிலத்தின் ஒரு நகரம்) நகரைச் சேர்ந்த பட்டேல் ஆவார், 'நாங்கள்' ஞானி புருஷ், எங்களுள் வெளிப்பட்ட பகவான் தான் தாதா பகவான். பதினான்கு உலகங்களின் அதிபதி இங்கு தோன்றி இருக்கிறார், அவரை 'நாங்கள்' தனிப்பட்ட முறையில் பார்த்திருக்கிறோம், அவரை 'நாங்கள்' அனுபவத்தில் கண்டிருக்கிறோம். அதனால் தான், அவர் எங்களுள் வெளிப்பட்டிருக்கிறார் என்று உத்தரவாதத்துடன் சொல்கிறோம்.

மேலும் இப்போது பேசுவது யார்? பேசுவது "பதிவு செய்யப்பட்ட பதிவு" தான். ஏனென்றால், தாதா பகவானுக்கு பேசும் சக்தி இல்லை, இந்த பட்டேல் 'பதிவு செய்யப்பட்ட பதிவின்' அடிப்படையில் பேசுகிறார். ஏனெனில், 'பகவான்' மற்றும் 'படேல்' இருவரையும் பிரிக்கப்பட்டது, எனவே, அந்த நிலையில் அஹங்காரத்தை வெளிப்படுத்த முடியாது. 'பதிவு செய்யப்பட்ட பதிவு' பேசுகிறது, அதன் அறிபவன் - காண்பவனாக 'நாங்கள்'

இருக்கிறோம். உங்களுக்கும், பதிவு செய்யப்பட்ட பதிவு தான், பேசுகிறது, ஆனால் உங்கள் மனதில், ‘நான் பேசினேன்’ என்று உங்களுக்கு கர்வம் உண்டாகிறது. மற்றபடி, ‘நாங்களும்’ தாதா பகவானை வணங்க வேண்டும். நாங்கள் மற்றும் தாதா பகவான் உண்மையிலேயே தனித்தனியானவர்கள். ஆனால் ‘நாங்கள்’ தான் தாதா பகவான் என்று மக்கள் நினைக்கிறார்கள். ‘நாங்கள்’ எப்படி தாதா பகவான் ஆக முடியும்? இவர் உண்மையில் பாத்ரனைச் சேர்ந்த படேல்.

## 11) அக்ரம் பாதை தொடர்கிறது ஞானிகளின் பரம்பரை தொடரும்

ஞானிகளின் பரம்பரையை விட்டுச் செல்வோம். நாங்கள் ‘எங்கள்’ வாரிசுகளை அமைத்துவிடுவோம், அதன்பிறகு, ஞானிகளின் இணைப்பு தொடரும். எனவே, வாழும் ஞானியைத் (சஜீவன் மூர்த்தி) தேடுங்கள். அவர் இல்லாமல் இறுதியான தீர்வை, எட்டுவது சாத்தியமில்லை.

தனிப்பட்ட முறையில் ‘நாங்கள்’, எங்களது ஆன்மீக சக்திகளை (சித்திகள்). சிலருக்கு கொடுக்க போகிறோம் ‘எங்களுக்கு’ பிறகு இது தேவைப்படும் அல்லவா? வருங்கால சந்ததியினருக்கு இந்த பாதை தேவைப்படும், இல்லையா?

## உலகம் யாரை ஏற்றுக் கொள்கிறதோ அவர் தான் அடுத்தவராக தொடருவார்

**கேள்வி கேட்பவர் :** நீங்கள் கூறுகிறீர்கள், “நாற்பதாயிரம் முதல் ஐம்பதாயிரம் பேர் என்னை இழந்து விட்ட துயரத்தில் இருப்பார்கள், ஆனால் ஒரு சீடர் கூட இருக்க மாட்டார்” என்று. இதன் மூலம் நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

**தாதாஸ்ரீ** : எனக்கு சீடர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். இது சிம்மாசனம் அல்ல. இது சிம்மாசனமாக இருந்தால், அதற்கு வாரிசு இருக்க வேண்டும், அல்லவா! நீங்கள் உறவினராக பிறக்க வேண்டும், அல்லவா! இங்கு ஏற்றுக் கொள்ளப்படுபவர் தான் அடுத்தவராக தொடருவார். எல்லோரின் சீடனாக இருப்பவரே பொருத்தமானவராக இருப்பார். இந்த விஷயத்தில், உலகம் யாரை ஏற்றுக் கொள்கிறதோ, அவர் தான் அடுத்தவராக தொடருவார். அனைவரையும் விட மிக்க பணிவானவராக இருப்பவரை உலகம் ஏற்றுக் கொள்ளும்!

## (12) ஆத்ம தரிசனம் அடைந்த பின், ஆத்ம சொரூபநிலை அடைந்ததற்கான அறிகுறிகள்.

ஞானம் பெறுவதற்கு முன்பு, நீங்கள் சந்தூபாய் என இருந்தீர்கள், தற்போது ஞானம் பெற்ற பிறகு, நீங்கள் சுத்தாத்மா ஆகி விட்டீர்கள். உங்கள் அனுபவத்தில் ஏதேனும் வித்தியாசம் இருக்கிறதா,

**கேள்வி கேட்பவர்** : ஆமாம்.

**தாதாஸ்ரீ** : 'நான் சுத்தாத்மா' என்ற அனுபவத்தினால் பெற்ற விழிப்பு நிலை (பாண்) எவ்வளவு நேரம் இருக்கிறது?

**கேள்வி கேட்பவர்** : நான் தனியாக ஒரு தனிமையான இடத்தில் அமர்ந்திருக்கும் பொழுது இருக்கிறது.

**தாதாஸ்ரீ** : ஆம். அதன் பிறகு, என்ன புரிதல் (பாவ்) நிலவுகிறது? 'நான் சந்தூபாய்' என்ற புரிதல் உங்களுக்கு எப்போதாவது இருக்கிறதா? 'நான் சந்தூபாய்' என்ற புரிதல் உண்மையில் உங்களுக்கு எப்போதாவது இருந்திருக்கிறதா? (ஞானம் அடைந்த பிறகு)

**கேள்வி கேட்பவர்** : ஞானம் பெற்ற பிறகு அப்படி இருப்பது இல்லை.

**தாதாஸ்ரீ** : எனவே நீங்கள் உண்மையிலேயே சுத்தாத்மா தான். ஒரு மனிதனுக்கு ஒரே ஒரு புரிதல் மட்டுமே இருக்கும். எனவே 'நான் சுத்தாத்மா' என்று உங்களுக்கு உண்மையில் எப்போதும் நிலைத்திருக்கும்.

**கேள்வி கேட்பவர்** : ஆனால், உலக தொடர்புகளின் போது, பல சமயங்களில், சுத்தாத்மா என்று அனுபவத்தில் பெற்ற விழிப்பு நிலை நிலைப்பதில்லை.

**தாதாஸ்ரீ** : அப்படியானால், 'நான் சந்தூபாய்' என்ற அகநிலை நிலைத்திருக்கிறதா? சுத்தாத்மா என்ற அகநிலை மூன்று மணி நேரத்திற்கு நிலைத்திருக்கவில்லை என்று வைத்துக் கொள்வோம், ஆனால் மூன்று மணி நேரம் கழித்து, உங்களிடம் "நீங்கள் சந்தூபாய் என்பவரா அல்லது சுத்தாத்மாவா?" என்று கேட்டால். அதற்கு நீங்கள் என்ன கூறுவீர்கள்?

**கேள்வி கேட்பவர்** : சுத்தாத்மா.

**தாதாஸ்ரீ** : அப்படியென்றால், அகநிலை (சுத்தாத்மா என்ற விழிப்பு நிலை) நிச்சயமாக இருந்து இருக்கிறது. ஒரு தொழிலதிபர் குடி போதையில் இருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம், அந்த நேரத்தில், அவர் தனது அகநிலை (வழிப்பு நிலையை) இழந்து விடுகிறார். ஆனால் மதுவின் தாக்கம் தணித்து விட்டால் என்ன ஆகும்?

**கேள்வி கேட்பவர்** : அவர் மறுபடியும் விழிப்பு நிலைக்கு வந்துவிடுகிறார்.

**தாதாஸ்ரீ** : இதே போல் தான், மற்ற வெளிப்புற தாக்கங்களும் இருக்கும்.

நான் உங்களிடம், “நீங்கள் உண்மையில் சந்தூபாய் என்பவரா அல்லது சுத்தாத்மாவா?” என்று கேட்டால். அதற்கு நீங்கள் “சுத்தாத்மா” என்று பதிலளிப்பீகள். நான் உங்களை நான் அடுத்த நாள் “நீங்கள் உண்மையில் யார்? என்று கேட்டால். அதற்கு நீங்கள் “சுத்தாத்மா” என்று பதிலளிப்பீர்கள். அதே கேள்வியை ஐந்து நாட்களுக்கு கேட்டபின், ‘உங்களின்’ திறவுகோள் (மாஸ்டர் கீ) ‘எங்களிடம்’ இருப்பதை ‘நாங்கள்’ புரிந்து கொள்வோம். பிறகு நீங்கள் எதிர்ப்பு தெரிவித்தாலும், ‘நாங்கள்’, உங்கள் பேச்சை கேட்க மாட்டோம். ‘நாங்கள்’, உங்களின் எதிர்ப்பை கண்டு கொள்ள மாட்டோம்.

## அபூர்வ விழிப்பு நிலை தோன்றியது

ஸ்ரீமத் ராஜ்சந்த்ர (1867 - 1901க்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த ஞானி புருஷ்) இதைப் பற்றி என்ன சொல்லி இருக்கிறார்? “சத்குருனா உபதேஷ்தி ஆவ்யு அபூர்வ பாண், நிஜபத் நிஜமாஹி லஹயு, தூர் தயு அஞ்ஞான்” (ஆத்ம அனுபவம் பெற்ற ஆன்மீக குருவின் போதனைகள் மூலம் அபூர்வ விழிப்பு நிலை தோன்றியது. ‘நான்’ என்பதின், நிலை ஆத்ம நிலையில் நிலைபெற்றுவிட்டது, ‘நான் யார்’ என்பதை பற்றிய அறியாமை நீங்கிவிட்டது) முன்பு, ‘நான் தான் உடல்’ என்ற விழிப்பு நிலை மட்டுமே இருந்தது. முன்பு, ‘நான் தான் உடல்’ என்ற விழிப்பு நிலையும் இருக்கவில்லை. எனவே, இப்போது, அபூர்வ விழிப்பு நிலை, ஆத்மா பற்றிய அனுபவ விழிப்பு நிலை ‘எங்களுக்கு’ தோன்றி இருக்கிறது. ‘நான்’ முன்பு இருந்த நிலையில், “நான் சந்தூபாய் என்று கூறிக் கொண்டு இருந்தது, இப்போது ‘நான்’ ஆத்ம நிலையில் நிலைப்பெற்றுவிட்டது. ‘நான்’, முன்பு இருந்த நிலையில் இருந்து ஆத்ம நிலையில் நிலைப்

பெற்றுவிட்டது. மேலும் 'நான் சந்தூபாய்' என்று இருந்த அஞ்ஞானம் (புரிதல்) நீங்கிவிட்டது.

## அதுவே 'நான் தான் உடல்' என்ற புரிதலாக கருதப்படுகிறது.

இவ்வுலகில் உள்ள அனைத்து மக்களும் 'நான் தான் உடல்' என்ற புரிதலை விட்டுவிட முடிவதில்லை மற்றும் அவர்களால் தன்னுடைய சுய சொரூபமான ஆத்ம நிலையில் நிலைத்திருக்க முடிவதில்லை. நீங்கள் ஆத்ம நிலையில் நிலைத்திருந்து இருக்கிறீர்கள் என்றால் அஹங்காரம் போய்விட்டது, 'என் தன்மை' நீங்கிவிட்டது என்பதாகும். 'நான் சந்துபாய்' என்பதை தேஹாத்யாஸ் (நான் தான் உடல் என்ற புரிதல்) என்று கருதப்படுகிறது. மேலும் 'நான் சுத்தாத்மா' என்ற நிறுவப்பட்ட விழிப்பு நிலை (லஷ்) நிறுவப்பட்டதில் இருந்து, அத்யாஸ் (தான் சந்தூபாய் என்று நடத்தையில் வந்த வேரூன்றிய புரிதல்) எதுவும் இருப்பதில்லை. அது எதுவும் இனி எப்போதும் இருப்பதில்லை. அப்படியும், ஏதேனும் தவறு நடந்தால், லேசான குழப்பமே ஏற்படும்.

## சுத்தாத்மாவின் நிலை உண்மையில் தூய்மையானது.

எனவே, இந்த ஞானம் அடைந்த பிறகு, 'நான் செய்கிறேன்', என்று முன்பு இருந்த மாயை, அந்த விழிப்பு நிலை அழிந்துவிட்டது. ஆகையால், 'நாங்கள்' (நான்) என்பதை சுத்தாத்மா என்று குறிப்பிடுகிறோம், அப்போது உண்மையில் நான் தூய்மையானவன் என்கிற அனுபவ விழிப்பு நிலை நிலைத்திருக்கும். யாருடனும் என்ன நடந்தாலும் அப்படி சந்தூபாய் யாரையாவது திட்டிவிட்டாலும் நீங்கள் தூய்மையானவர் தான். பிறகு, நீங்கள் சந்தூபாய் அவரிடம் சொல்ல வேண்டும்,நீ

மற்றவரை ஏன் துக்கப்படுத்துகிறாய்? இப்போது ப்ரத்திக்ரமன் (ஒரு தவறை ஒப்புக்கொண்டு, மன்னிப்பு கேட்டு, மீண்டும் செய்யாமல் இருக்க தீர்மானிப்பது) செய்யவும்.

நீங்கள் மற்றவரை புண்படுத்துவது போல் ஏதாவது பேசினால், அது அதிக்ரமன், (மனது, பேச்சு அல்லது உடல் மூலம் மற்ற எந்த உயிரினத்தையும் துக்கப்படுத்துவது) அத்தகைய செயலுக்கு ப்ரத்திக்ரமன் (கழிவிரக்கம்) செய்ததாகக் கருதப்படுகிறது செய்ய வேண்டும்.

ப்ரத்திக்ரமன் என்றால் உங்களுக்கு புரிந்த ஏதாவது ஒரு முறையில் மன்னிப்பு கேட்டது. 'இது என்னுடைய தவறு என்று புரிந்துகொண்டேன், மேலும் இந்த தவறை மீண்டும் செய்ய மாட்டேன்', என்று நீங்கள் முடிவு செய்ய வேண்டும். நீங்கள் ஒரு உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும், எப்படியென்றால், "நான் செய்தது தவறு, இதை செய்யக் கூடாது. இதை மீண்டும் செய்யமாட்டேன்" என்று. அப்படியிருந்தும் அது மீண்டும் நடந்தால், அதே தவறு மீண்டும் மீண்டும் நடந்தால், அதற்காக நீங்கள் மீண்டும் வருந்த வேண்டும். எனவே நீங்கள் எவ்வளவு தவறுகளை கண்டுபிடித்து, அதற்காக நீங்கள் வருந்துகிறீர்களோ, தவறுகள் அந்த அளவிற்கு குறையும். இப்படி அது படிப்படியாக முடிவுக்கு வந்துவிடும்.

**கேள்வி கேட்பவர்** : அப்படியானால், மற்ற மனிதருக்கு எப்படி ப்ரத்திக்ரமன் செய்ய வேண்டும்.

**தாதாஸ்ரீ** : முதலில், மனம், உடல், பேச்சு, கர்ம ஏற்றம், நுட்பமான கர்ம இரக்கம் மற்றும் வெளிப்படையான கர்ம இரக்கம் (நபரின் பெயர்) மற்றும் (நபரின் பெயரின்) அனைத்து மாயைகளிலிருந்து முற்றிலும் பிரிந்து இருக்கும்

சுத்தாத்மாவை நினைவுப்படுத்திக் கொள்ளுங்கள். பின்னர் செய்த தவறுகளை நினைவு கூறுங்கள் (ஆலோச்சனா). (பின் வருவதை மனதிற்குள் சொல்லவும்) ‘இந்த தவறுகளுக்காக நான் வருந்துகிறேன், இந்த தவறுகளுக்காக என்னை மன்னித்து விடுங்கள் (ப்ரத்திக்ரமன்). நான் இந்த தவறுகளை மீண்டும் செய்யாமல் இருக்க வேண்டும் என்று உறுதியான தீர்மானம் செய்கிறென் (ப்ரத்தியாக்யான்). நீங்கள், சந்தூபாய் அவர்களின் அறிபவர் - காண்பவர் என்ற நிலையில் இருக்க வேண்டும், மேலும் சந்தூபாய் எத்தனை ப்ரத்திக்ரமன் செய்கிறார், எவ்வளவு சிறப்பாக செய்கிறார், எத்தனை முறை செய்கிறார் என்பதை அறிய வேண்டும்.

## பிரக்ஞை உள்ளிருந்து உங்களை எச்சரிக்கும்

இது ஒரு விஞ்ஞானம், அதனால் நீங்கள் இதன் அனுபவம் அடைவீர்கள், மற்றும் உங்களை உள்ளிருந்து எச்சரிக்கும். க்ரமிக் பாதையில் (வழக்கமான படிப்படியான ஆன்மீக முன்னேற்றத்திற்கான பாதையில்) நீங்கள் காரியங்களை செய்ய முயற்சி செய்ய வேண்டும், ஆனால் ‘இது’ (பிரக்ஞை) உங்களை உள்ளிருந்து எச்சரிக்கும்.

**கேள்வி கேட்பவர்** : உள்ளிருந்து எச்சரிக்கை நிகழ்கிற அனுபவம் இப்போது ‘நான்’ பெற்றுவிட்டேன்.

**தாதாஸ்ரீ** : ‘நீங்கள்’ இப்போது இந்தப் பாதையைக் கண்டுப்பிடித்து, சுத்தாத்மாவின் எல்லைக்குள் இருக்கும் முதல் ‘கதவுக்குள்’ நுழைந்துவிட்டீர்கள். உங்களை இங்கிருந்து யாராலும் திருப்பி விட முடியாது. உங்களை திருப்பி அனுப்ப யாருக்கும் அதிகாரம் இல்லை. அத்தகைய இடத்தில் நீங்கள் நுழைந்துவிட்டீர்கள்!

உங்களை மீண்டும் மீண்டும் எச்சரிப்பது யார், பிரக்ஞா (மோட்சம் அடைய உதவும் ஆத்ம சக்தி)

எச்சரிக்கிறது! ஞானம் அடையாத வரை பிரக்ஞா தோன்றாது. மற்றொரு முறையில் கூறுவதென்றால், ‘நான் சுத்தாத்மா என்ற சரியான புரிதல் (சம்கித்) அடைந்தவுடன் பிரக்ஞா தோன்றுகிறது. ‘நான் சுத்தாத்மா’ என்ற சரியான புரிதல் (சம்கித்) அடைந்தவுடன் பிரக்ஞா எப்படி தோன்றுகிறது? அது சந்திர சுழற்சியின் இரண்டாவது நாள் உள்ளதை போல் இருக்கிறது. இங்கு நாம் எல்லோருக்கும் (மகாத்மாக்கள்), பிரக்ஞா முழுமையாக வெளிப்படுத்தப்படுகிறது. பிரக்ஞா என்பது தான் முழுமையாக வெளிப்படுத்தப்படுகிறது, எனவே அது உங்களை மோட்சத்திற்கு அழைத்துச் செல்லும் நோக்கத்திற்காக மட்டுமே உங்களை எச்சரிக்கிறது. மன்னன் பரதன் (தன் தந்தையான, பரம ஆன்மீக ஞானம் பெற்ற விழிப்பு நிலை அடைந்த தீர்த்தங்கரர் ருஷபதேவ் பகவான் அவர்களிடமிருந்து அக்ரம் ஞானம் பெற்றவர்) அவர்களை எச்சரிக்க ஆட்களை நியமிக்க வேண்டியிருந்தது, பதினைந்து நிமிடங்களுக்கு ஒரு முறை கூப்பிட்டு, “ராஜா பரதன் கவனமாக இருங்கள்”, என்று மூன்று முறை கூறுவதற்கு வேலைக்காரர்கள் அவரிடம் இருந்தார்கள். பாருங்கள், உங்களுக்கு, பிரக்ஞை உள்ளிருந்து உங்களை எச்சரிக்கிறது. பிரக்ஞை உங்களை எச்சரித்துக் கொண்டே இருக்கும், ‘ஹே, அதை செய்யாதே’ என்று. நாள் முழுவதும் ‘அது’ (பிரக்ஞை) உங்களை எச்சரித்தக் கொண்டே இருக்கும். அதுவே ஆத்ம அனுபவம்! நாள் முழுவதும் நிலையான ஆத்ம அனுபவம் நிலைத்திருக்கும்.

## சந்தேகத்திற்கு இடமின்றி அனுபவம் உள்ளிருக்கிறது

எந்த நாளில், ‘நாங்கள்’ உங்களுக்கு ஞானம் அளிக்கிறோமோ, அந்த நாளில் ஏற்படும் அனுபவம் ஒரு

போதும் நீங்காது. அது எப்படி நீங்க முடியும்! 'நாங்கள்', உங்களுக்கு ஞானம் அளித்த அந்த நாளில், அந்த நாளில் ஏற்படும் அனுபவம் என்றென்றும் இருக்கும். இருப்பினும், பிற்பாடு உங்களுடைய கர்மா ஆதிக்கம் பெறுகிறது, கடந்த ஜென்மத்தின் கர்ம ஏற்றம், மீதம் இருக்கும் துன்பங்கள் மற்றும் கடனாளிகள் தங்கள் கடனை மீட்டெடுக்க வருவார்கள், அதில் 'நாங்கள்' என்ன செய்ய முடியும்?

**கேள்வி கேட்பவர்** : ஆனால் தாதா, இப்போது அதே அளவிலான துன்பம் ஒரு போதும் உணருவதில்லை.

**தாதாஸ்ரீ** : இல்லை. அதே அளவு உணருவதில்லை என்பது வேறு விஷயம். இருப்பினும், அதிக கடன்காரர்களைக் கொண்டிருப்பவருக்கு, அவரை அதிக அளவில் தாக்குவார்கள். ஐந்து கடனாளிகள் இருந்தால், அவர் ஐந்து பேரால் தாக்கபடுவார், இருவர் இருந்தால், அவர் இரண்டு பேரால் தாக்கப்படுவார், இருபது பேர் இருந்தால், அவர் இருபது பேரால் தாக்கப்படுவார். 'நாங்கள்' உங்களை சுத்தாத்மா நிலையில் நிலைபெற செய்துள்ளோம். ஆனால் அடுத்த நாள் கர்ம ஆதிக்கத்தினால், நீங்கள் சற்று குழுப்ப நிலை அடைவீர்கள்.

## இப்போது மீதம் இருப்பது என்ன?

மற்றொன்று க்ரமிக் பாதையின் விஞ்ஞானம், இது அக்ரம் விஞ்ஞானம். இந்த ஞானம் முற்றிலும், முழுமையாக விருப்பு வெறுப்பற்ற (விதராக்) பகவான்களுக்குரியது. ஞானத்தில் எந்த வேறுபாடும் இல்லை. நாங்கள் ஞானம் வழங்கிய பிறகு, நீங்கள் ஆத்ம அனுபவம் பெறுகிறீர்கள் அதன்பின் நீங்கள் 'செய்ய' என்ன இருக்கிறது? ஞானி புருஷ் அவர்களின் ஆணைகளை

பின்பற்ற வேண்டும். ஆணைகளே மதம் மற்றும் ஆணைகளே தவம். எவ்வாறாயினும், 'எங்களது' ஆணைகள் ஒரு போதும், உலக வாழ்க்கையை எந்தவிதத்திலும் கட்டுப்படுத்துவதில்லை. உலக வாழ்க்கையில் வாழ்ந்து கொண்டு இருந்தாலும், உலக வாழ்வு எதுவும் உங்களை பாதிக்காது. அப்படிப்பட்டது தான் இந்த அக்ரம் விஞ்ஞானம்.

எனவே, நீங்கள் இன்னும் ஒரு ஆயுளுக்குப் பிறகு (ஏகாவதாரி) மோட்சம் அடையக்கூடிய நிலையை அடைய விரும்பினால், 'நாங்கள்' சொல்வதைப் போலவே நீங்கள் ஆணைகளைப் பின்பற்றுங்கள். இந்த விஞ்ஞானம் எப்படியென்றால் இன்னும் ஒரு ஆயுளுக்குப் பிறகு நீங்கள் மோட்சம் அடைந்து விடுவீர்கள். இந்த விஞ்ஞானம் இருந்தும் கூட இங்கிருந்து (பாரத க்ஷேத்திரம், பூமி கிரகம் இருக்கும் பிரபஞ்சத்தின் இருப்பிடம், மேலும் இங்கு தற்போது காலச் சுழற்சியின் ஐந்தாவது சகாப்தமாக உள்ளது, இந்த காலத்தின் பொழுது மோட்சம் அடைவது சாத்தியமில்லை) மோட்சம் அடைவது என்பது சாத்தியமற்றது.

## மோட்ச பாதையில், ஆணைகளே மதம்

மோட்சம் அடைய விரும்புபவருக்கு சடங்குகள் தேவையில்லை. தேவ கதியில் உயிர் பெற விரும்புபவர், மற்றும் உலக இன்பங்களை விரும்புபவர், சடங்குகளைச் செய்ய வேண்டும். மோட்சம் அடைய விரும்புபவருக்கு ஆத்ம ஞானம் மற்றும் ஞானியன் ஆணைகள் மட்டுமே தேவைப்படும்.

மோட்ச பாதையில் தவம் (தப்) அல்லது துறவு (தியாக்) தேவையில்லை. ஒருவர், ஞானி புரூஷ் அவர்களை சந்தித்து விட்டால், பிறகு ஞானியின் ஆணைகளே மதம்,

மற்றும் ஆணைகளே தவம். உண்மையிலேயே, அவை தான் ஞானம் (ஞான்), தரிசனம் (தர்சன்), நடத்தை (சாரித்ர), தவம் (தப்), அதன் நேரடி விளைவு மோட்சம் தான்.

## ஞானியின் அருகில் இருத்தல்

ஞானி மீது ஒரு போதும் அன்பு உணர்ச்சி எழுந்ததில்லை. ஒரு முறை ஞானி மீது அன்பு உணர்ச்சி எழுந்துவிட்டால், எல்லா தீர்வுகளும் கிடைத்துவிடும். ஒவ்வொரு பிறவியிலும், மனைவி மற்றும் குழந்தைகள் (போற்றிக் கொண்டு இருந்ததை) தவிர, வேறு எதுவும் இருந்ததில்லை!

ஞானி புருஷ் அவர்களிடமிருந்து 'நான் சுத்தாத்மா' என்ற சரியான புரிதல் (சம்கித்) அடைந்த பிறகு, ஞானி புரூஷ் அவர்களை பின் தொடரவும், என்று பகவான் கூறியிருக்கிறார்.

**கேள்வி கேட்பவர்** : எந்த அர்த்தத்தில் நாம் அவரைப் பின் தொடர வேண்டும்?

**தாதாஸ்ரீ** : ஏந்த அர்த்தத்தில் என்றால், இந்த ஞானம் அடைந்த பிறகு, வேறு எந்த பக்தியும் இல்லை என்பதாகும். இருப்பினும். இது அக்ரம் என்பதை 'நாங்கள்' அறிவோம். இந்த மக்கள் எண்ணற்ற 'பைல்'களுடன் (கோப்புகளுடன்) வந்துள்ளனர். (பைல் ஒருவரை ஆத்ம சொரூபத்திலிருந்து விலக்கி உலக வாழ்க்கைக்கு அழைத்துச் செல்லும் கர்ம கணக்குகளை குறிக்கும் தாதாஸ்ரீயின் சிறப்பு சொல்). ஆகையால், இந்த 'பைல்களை' முடிக்க செல்வதற்கு, 'நாங்கள்', உங்களுக்கு சுதந்திரம் அளித்துள்ளோம். ஆனால், இதன் அர்த்தம் உங்கள் (ஆன்மீக) வேலை முடிந்துவிட்டது என்பதல்ல. இந்த நாட்களில், ஏராளமான பெரிய 'பைல்கள்' உள்ளன,

எனவே உங்களை, 'நாங்கள்' 'எங்களுடன்' வைத்திருந்தால். உங்கள் 'பைல்கள்' உங்களை அழைத்து செல்ல வந்துவிடுவார்கள். அதனால் தான், வீட்டுக்கு சென்று 'பைல்களை' உள்ளச் சமநிலையுடன் முடிப்பதற்கு, 'நாங்கள்', உங்களுக்கு சுதந்திரம் அளித்துள்ளோம். இல்லையெனில், ஒருவர் ஞானியின் அருகில் மட்டுமே இருக்க வேண்டும்.

இது ஒருபுறம் இருக்க, நீங்கள் முழுமையாகப் பயனடைய முடியவில்லையே என்று இரவும் பகலும் இடைவிடாது உங்களை உறுத்திக் கொண்டு இருக்க வேண்டும். 'உங்களுக்கு' 'பைல்கள்' இருக்கலாம், ஞானி புருஷ் கூறியிருக்கிறார், 'பைல்களை' உள்ளச் சமநிலையுடன் முடிக்க வேண்டும் என்று அவர் அதை ஒரு ஆணையாக வைத்து இருக்கிறார். ஆகையால், ஆணைகளை மதம் (தர்மா), அல்லவா? அது தான் நம் மதம். இருப்பினும், 'இந்த பைல்கள் குறையட்டும் அப்போது தான் நான் பயனடையலாம்' என்று நீங்கள் வருந்திக் கொண்டு இருக்க வேண்டும்.

## அவருக்கு, மகாவிதேக ஷேத்திரம் உடனடியாக அருகே வந்துவிடும்.

இங்கு, யார் ஒருவருக்கு, தான் சுத்தாத்மா என்ற நிறுவப்பட்ட விழிப்பு நிலை (லஷ்) நிலைப்பெற்று இருக்கிறதோ, அத்தகைய நபர் இங்கு பாரத ஷேத்திரத்தில் இருக்க முடியாது. யார் ஒருவருக்கு சுத்தாத்மா என்ற நிறுவப்பட்ட விழிப்பு நிலை நிலைப் பெற்று இருக்கிறதோ, அப்படியானவர் நிச்சயமாக மகாவிதேக ஷேத்திரத்தை (பிரபஞ்சத்தில் மனிதர் இனம் வசிக்கும் மூன்று இருப்பிடங்களில் ஒன்று. மகாவிதேக ஷேத்திரத்தில், வாழும் தீர்த்தங்கரர் பகவான் எப்போதும்

இருந்து கொண்டே இருப்பார்கள், ஜீவராசிகள் அங்கிருந்து மோட்சம் அடைய எப்போதும் சாதகமாக இருக்கிறது) அடைவார் என்பது இயற்கையின் விதி! அப்படிப்பட்டவர் இங்கே இந்த துஷம காலத்தில் (இந்த காலச் சுழற்சியின் தற்போதைய சகாப்தத்தின் சிறப்பியல்பு என்னவென்றால் எண்ணம், பேச்சு மற்றும் செயலில் ஒற்றுமை இல்லாமை) இருக்க முடியாது. ஒரு முறை சுத்தாத்மா என்ற நிறுவப்பட்ட விழிப்பு நிலை நிலைப் பெற்றவுடன், ஒருவர் இன்னும் ஓரிரு ஆயுளைக் கழித்துவிட்டு, மகாவிதேக ஷேத்திரத்தில் தீர்த்தங்கரர் பகவான் சீமந்தர் சுவாமியை தரிசனம் (ஆன்மீக தரிசனம்) செய்துவிட்டபின், அவர் மோட்சம் அடைந்து விடுவார். இந்த பாதை அவ்வளவு எளிதானது மற்றும் நேரடியானது. எங்கள் ஆணைகளில் இருங்கள். ஆணைகளே மதம், ஆணைகளே தவம்! உள்ளச் சமநிலையுடன் (பைல்களை) முடிக்கவும். வழங்கப்பட்ட அனைத்த ஆணைகளிலும், உங்களால் முடிந்த வரை இருங்கள். நீங்கள் முழுமையாக அவற்றில் நிலைத்திருந்தால், பகவான் மகாவீர் (நிலையின்) போலவே இருக்க முடியும்! அப்படி நீங்கள் ரியல் (ஆத்ம சொரூபம்) மற்றும் ரிலேடிவ் (தற்சார்பு சொரூபம்) என்று ஒவ்வொரு உயிரினங்களிலும் தரிசித்தால், உங்களுடைய சித் (சித்தம்) (தரிசனம் மற்றும் ஞானம் கொண்ட நுட்பமான உட்கூறு) வேறு எங்கும் போகாது. இருப்பினும், அச்சமயத்தில், மனதில் ஏதாவது எழுந்தால், நீங்கள் அதில் சிக்கிக் கொள்கிறீர்ககள்.

## (13) ஐந்த ஆணைகளின் முக்கியத்துவம் ஞானம் பெற்ற பிறகு என்ன ஆன்மீக பயிற்சி செய்ய வேண்டும்?

**கேள்வி கேட்பவர்** : இந்த ஞானம் அடைந்த பிறகு ஒருவர் எந்தவிதமான ஆன்மீக பயிற்சியை (சாதனா) செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ** : ஐந்து ஆணைகளைப் பின்பற்றுவது மட்டுமே ஆன்மீகப் பயிற்சி! இப்போது வேறு எந்த சாதனை முயற்சியும் (பயிற்சியும்) தேவை இல்லை. மற்ற அனைத்து சாதனை முயற்சி (பயிற்சி) பந்தத்திற்கு வழிவகுக்கும். இந்த ஐந்து ஆணைகள் பந்தத்தில் இருந்து விடுபட வழி வகுக்கும்.

## ஆணைகளில் சமாதி நிலவும்

**கேள்வி கேட்பவர்** : இந்த ஐந்து ஆணைகளை விட உயர்ந்தது ஏதேனும் இருக்கிறதா?

**தாதாஸ்ரீ** : இந்த ஐந்து ஆணைகள், உங்களின் விலை மதிப்பற்ற பொக்கிஷத்தை யாரும் எடுத்து செல்ல முடியாதபடி இருக்கிற ஒரு பாதுகாப்பு வேலி. அந்த பாதுகாப்பு வேலியை நீங்கள் பராமரித்தல், 'நாங்கள்' உங்களுக்கு வழங்கிய ஞானம் அப்படியே நிலைத்திருக்கும், ஆனால் பாதுகாப்பு வேலி பலவீனம் அடைந்துவிட்டால், யாரேனும் உள்ளே நுழைந்து அழிவை ஏற்படுத்துவார். அப்போது 'நாங்கள்' அதை சரி செய்ய வர வேண்டி இருக்கும். எனவே, நீங்கள் ஐந்து ஆணைகளுக்குள் இருக்கும் வரை, நிலையான சமாதி நிலை (ஒருவர் மனம் சார்ந்த, உடல் சார்ந்த, மற்றும் வெளிப்புறத்தில் இருந்து தூண்டப்பட்ட துன்பங்களிலிருந்து

விடுபடும் போது ஏற்படும் ஒரு ஆனந்த நிலை) நிலவும் என்று ‘நாங்கள்’ உத்தரவாதம் தருகிறோம்.

‘நாங்கள்’ ஐந்து ஆணைகளை பாதுகாப்பிற்காக உங்களுக்கு வழங்குகிறோம். ‘நாங்கள்’ இந்த ஞானத்தை உங்களுக்கு வழங்கி உள்ளோம், மற்றும் பேத விஞ்ஞானத்தினால், பிரிதலும் ஏற்பட்டுவிட்டது. இருப்பினும், இந்த பிரிந்த நிலை நிலைக்க, ‘நாங்கள்’ ஐந்து ஆணைகளை பாதுகாப்பிற்காக உங்களுக்கு வழங்குகிறோம். இது கலியுகம் (காலச்சுழற்சியின் தற்போதைய சகாப்தத்தின் சிறப்பியல்பு என்னவென்றால் ஆன்மீக வீழ்ச்சி அடைவது) என்பதால், நீங்கள் (விலைமதிப்பற்ற பொக்கிஷமான ஞானம்) யாரிடமும் தொலைத்து விடாமல் இருபபதற்கு தான் இந்த ஐந்து ஆணைகள். ஞான விதை என்பது மலர வேண்டுமானால், அதற்கு நீர் ஊற்றி, பராமரிக்க வேண்டும், அல்லவா? ஒரு சிறிய பாதுகாப்பு வேலி அமைக்க வேண்டியது அவசியமா, இல்லையா?

## உறுதியான தீர்மானம் மட்டுமே, உங்களை இந்த ஆணைகளைப் பின்பற்ற வைக்கும்.

தாதாவின் ஆணைகளைப் பின்பற்ற வேண்டும் என்பது எல்லாவற்றையும் விட பெரிய விஷயம். ஆணைகளை பின்பற்ற வேண்டும் என்று நீங்கள் உறுதியான முடிவு செய்ய வேண்டும். ஆணைகளை உங்களால் பின்பற்ற முடிகிறதா, இல்லையா என்பதை ஆராய வேண்டாம். நீங்கள் ஆணைகளை எவ்வளவு பின்பற்றுகிறீர்களோ அவ்வளவு சரியானது தான், ஆனால் நீங்கள் ஆணைகளை பின்பற்ற வேண்டும் என்று உறுதியான முடிவு செய்ய வேண்டும்.

**கேள்வி கேட்பவர்** : ஆணைகளை முழுவதுமாக கடைப் பிடிக்காவிட்டால் பிரச்சனை இல்லை, அல்லவா?

**தாதாஶ்ரீ** : பிரச்சனை இல்லை என்று இல்லை. ஆணைகளை கண்டிப்பாக பின்பற்ற வேண்டும் என்று 'நீங்கள்' உறுதியான முடிவு செய்ய வேண்டும்! நீங்கள் காலையில் எழுந்தது முதல், உறுதியான முடிவு செய்யுங்கள், 'நான் ஐந்து ஆணைகளில் மட்டுமே இருக்க வேண்டும், அவற்றை பின்பற்ற வேண்டும்' என்று. இதை நீங்கள் முடிவு செய்த தருணத்திலிருந்து, நீங்கள் 'எங்கள்' ஆணைக்குள் வந்துவிட்டீர்கள், அவ்வளவு தான் 'எங்களுக்கு' வேண்டியது. நீங்கள் அவற்றை பின்பற்ற முடியாததின் காரணங்களை 'நாங்கள்' அறிவோம். 'நான் அவற்றை பின்பற்ற வேண்டும்!' என்று 'நீங்கள்' கண்டிப்பாக உறுதியான முடிவு செய்ய வேண்டும்.

எங்கள் ஞானம் (யாரெல்லாம் அடைந்து இருக்கிறார்களோ மற்றும் பின்பற்றுகிறார்களோ) கண்டிப்பாக மோட்சம் அடைய செய்யும். நீங்கள் ஆணைகளில் இருந்தால், நீங்கள் மோட்சம் அடைவீர்கள். இதில் கருத்து மாற்றம் இல்லை. ஒருவர் ஆணைகளை பின்பற்றவில்லை என்றாலும், அவர் ஞானம் அடைந்ததினால், ஞானம் வளராமல் இருக்காது. மக்கள் என்னிடம் கேட்பார்கள், 'ஞானம் அடைந்த சிலர் ஆணைகளைப் பின்பற்றுவதில்லை, அதனால் அவர்களுக்கு என்ன நடக்கும்? நான் அவர்களிடம் சொல்வது என்னவென்றால், "நீங்கள் அதைப் பற்றி கவலைப்படத் தேவையில்லை. நான் அதை கவனிக்க வேண்டும். அவர்கள் 'எங்களிடமிருந்து' ஞானம் பெற்று கொண்டார்கள், இல்லையா! இதனால் நீங்கள் நஷ்டம் அடையவில்லை, அல்லவா!" ஏனென்றால் தீய கர்மா அழியாமல் இருக்காது.அது உட்குழியாகிவிட்டது. 'எங்கள்' ஐந்து

ஆணைகளில் நீங்கள் இருந்தால், நீங்கள் வெற்றி பெறுவீர்கள். ‘நாங்கள்’ எப்போதும் ஐந்து ஆணைகளில் இருக்கிறோம், ‘நாங்கள்’ எந்த நிலையில் நிலவுகிறோமோ, அந்த நிலையை தான் நாங்கள் உங்களுக்கு வழங்கி இருக்கிறோம். நீங்கள் ஆணைகளில் இருந்தால், உங்கள் (ஆன்மீக) வேலை முடிந்து விடும். ஒரு இலட்ச ஆயுட்காலம், ஒருவர் தனது சொந்த முயற்சியில் இதை அடைய முயற்சி செய்தால் என்றாலும் அவர் வெற்றி பெற முடியாது. எப்படியும், ஒருவர் தனது சொந்த பகுத்தறிவை பயன்படுத்தி ஆணைகளைப் பின்பற்றுகிறார், அவர் தனது சொந்த புரிதலில் ஆணைகளை புரிந்து கொள்கிறார், இல்லையா! அதனால் சில கசிவுகள் தொடர்ந்து ஏற்படுகின்றன. எனினும், ஆணைகளைப் பின்பற்றுவதன் பின்னனியில் உள்ள அவரின் நோக்கம் என்னவென்றால், ‘நான் ஆணைகளை பின்பற்ற வேண்டும்’ என்பது. எனவே விழிப்படைந்த விழிப்பு நிலை (ஜாக்ருதி) தேவை.

நீங்கள் ஆணைகளைப் பின்பற்ற மறந்துவிட்டால், அதற்கு ப்ரத்திக்ரமன் செய்ய வேண்டும். ‘நீங்கள்’ மறந்துவிடலாம், என்னயிருந்தாலும் நீங்கள் மனிதர் தான். இருப்பினும், மறந்ததற்கு ப்ரத்திக்ரமன் இப்படி சொல்லி செய்ய வேண்டும், ‘ஓ தாதா, இந்த இரண்டு மணி நேரம் மறந்துவிட்டேன், உங்கள் ஆணைகளை மறந்து விட்டேன். இருப்பினும், நான் ஆணைகளை பின்பற்ற வேண்டுகிறேன். தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள்’ என்று. அப்போது நீங்கள் முழு தேர்ச்சி மதிப்பெண்களைப் பெறுவீர்கள். பிறகு நீங்கள், உங்களுடைய பொறுப்பில் இருந்து விடுபட்டுவிடுவீர்கள். நீங்கள் ஒருமுறை ஆணைகளுக்குள் வந்துவிட்டால், ஒட்டு மொத்த உலகத்தில் உள்ள எதுவும் உங்களைப் பாதிக்காது. ‘எங்களின்’ ஆணைகளை நீங்கள் பின்பற்றினால் உங்களை எதுவும் பாதிக்காது. அப்படியானால் ஆணைகளை

வழங்கியவர் பொறுப்புக்குள்ளாவரா? இல்லை, ஏனென்றால் அவர் மற்றவரின் நன்மைக்காக செய்கிறார். ஆகையால் அது அவரை பாதிக்காது. மேலும் அனைத்தும் கரைந்து விடுகிறது.

## இவை பகவானின் ஆணைகள்!

தாதாவின் ஆணைகளை பின்பற்றுவது என்பது ஏ.எம்.படேல் அவர்களின் ஆணைகள் என்ற அர்த்தமல்ல. ஆணைகள் தாதாபகவானுடையது, அவர் பதினான்கு உலகங்களுக்கும் அதிபதியானவர், இதற்கு நாங்கள் உத்தரவாதம் தருகிறோம். இந்த பேச்சு வார்த்தை (ஆணைகள் பற்றி) என் மூலமாக வெளிப்படுத்தப்பட்டு இருக்கிறது. எனவே, நீங்கள் ஆணைகளை பின்பற்ற வேண்டும். அவை என்னுடைய ஆணைகள் அல்ல, அவை தாதா பகவானின் ஆணைகள், 'நாங்களும்' (ஞானி புருஷ்), இந்த ஆணைகளில் இருக்கிறோம், அல்லவா!

## ஜெய் சச்சிதானந்தம்

(அழிவற்றிருக்கும் பரம்பொருளை அறிவதே பேரானந்தம்)

## ப்ராதஹ விதி

(தினந்தோறும் காலை ஒரு முறை)

(சுத்தாத்மா என்ற விழிப்பு நிலையுடன் சொல்லவும்)

- ஶ்ரீ சீமந்தர் சுவாமி அவர்களை வணங்குகிறேன். (5)
- அன்பின் திருவுருவமான “தாதாபகவான்” அவர்களை வணங்குகிறேன். (5)
- எனது மனதால் - பேச்சால் - உடலால், இவ்வுலகின் யாதொரு ஜீவராசியையும் சிறிது அளவு கூட துக்கப்படுத்தாமல் இருக்க வேண்டுகிறேன். (5)
- சுத்தாத்மா அனுபவத்தை தவிர, இவ்வுலகின் யாதொரு அழியக் கூடிய பொருள் மீது எனக்கு விருப்பமில்லை. (5)
- ஞானிபுருஷ் தாதாபகவான் அவர்களின் ஆணையில் நிரந்தரமாக இருக்க பரம சக்தி பெற வேண்டுகிறேன். (5)
- ஞானிபுருஷ் தாதாபகவான் அவர்களின் சர்வ விஞ்ஞானத்தினால் பரம ஞானம், பரம ஞான திருஷ்டி மற்றும் பரம நடத்தை என்னுள் மிகச்சிறப்பாக, சம்பூர்ணமாக, முழுமை பெற வேண்டுகிறேன். (5)

## ஜெய் சச்சிதானந்தம்

## Books of Dada Bhagwan

| | |
|---|---|
| 1.Adjust Everywhere<br>2.Ahimsa : Non-Violence<br>3.Anger<br>4.Aptavani-1<br>5.Aptavani-2<br>6.Aptavani-4<br>7.Aptavani-5<br>8.Aptavani-6<br>9.Aptavani-8<br>10.Aptavani-9<br>11.Autobiography of Gnani Purush A.M Patel<br>12.Avoid Clashes<br>13.Brahmacharya<br>14.Death : Before, During & After<br>15.Flawless Vision<br>16.Generation Gap<br>17.Harmony in Marriage<br>18.Life Without Conflict<br>19.Money<br>20.Noble Use of Money | 21.Pratikraman<br>22.Pure Love<br>23.Right Understanding to Help Others<br>24.Science of Karma<br>25.Science of Speech<br>26.Shree Simandhar Swami : The Living God<br>27.The Essence Of All Religion<br>28.The Fault Is Of The Sufferer<br>29.The Guru and The Disciple<br>30.The Hidden Meaning Of Truth & Untruth<br>31.The Practice Of Humanity<br>32.Trimantra : The mantra that removes all the worldly obstacles<br>33.Whatever Happened is Justice<br>34. Who Am I ?<br>35.Worries |

- Dada Bhagwan books are availables in different languages: Gujarati, Hindi, English, Marathi, Telegu, Kanada, Oriya, Malayali, Bengali, Punjabi, Assamese, Tamil, German, Spanish, Russian etc
- ‘Dadavani’ Magazine is published every month in three Languages: Gujarati, Hindi, and English.

**www.dadabhagwan.org**

## Dada Bhagwan Parivar

**Adalaj:** Trimandir, Simandhar City, Ahmedabad-Kalol Highway,
Po/Adalaj, Dist.: Gandhinagar-382421, Gujarat, India.
Tel: +91-9328661166/ 9328661177
Email: info@dadabhagwan.org

| | | | |
|---|---|---|---|
| **Mumbai** | 9323528901 | **Delhi** | 9810098564 |
| **Kolkata** | 9830093230 | **Chennai** | 7200740000 |
| **Jaipur** | 9351408285 | **Patna** | 7352723132 |
| **Bhopal** | 9425024405 | **Amravati** | 9422915064 |
| **Indore** | 9039936173 | **Bangalore** | 9590979099 |
| **Raipur** | 9329644433 | **Hyderabad** | 9989877786 |
| **Chandigarh** | 9780732237 | **Pune** | 9422660497 |
| **Kanpur** | 9452525981 | **Jalandhar** | 9814063043 |
| **Bhubaneswar** | 8763073111 | **Sangli** | 9423870798 |
| **Varanasi** | 9795228541 | | |

| | |
|---|---|
| **U.S.A Dada Bhagwan Vignan Institute**<br>Tel: +1 877-505-DADA(3232)<br>Email:info@us.dadabhagwan.org | **U.K: Dada Darshan (UK)**<br>Tel: +44 330-111-DADA(3232)<br>Email:info@uk.dadabhagwan.org |
| **Germany** :+49 700 32327474<br>**UAE:** +97 1557316937<br>**Kenya:** +25 4722722063<br>**Dubai**: +971 501364530 | **Australia:** +61 421127947<br>**New Zealand:** +6421 0376434<br>**Singapore:** +65 81129229 |

**www.dadabhagwan.org**

## வாழ்க்கையின் இலக்கு

இந்த உலக வாழ்க்கை உங்களுக்கு பொருத்தமானதாக இருந்தால் பிறகு தெரிந்து கொள்வதற்கு வேறொன்றும் இல்லை. அதே சமயம் உலக வாழ்க்கை உங்களுக்கு ஏதேனும் பிரச்சினை ஏற்படுத்துகிறது என்றால், நீங்கள் ஆன்மீகத்தை தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். நம் சொருபத்தை அறிந்து கொள்ள வேண்டும். "நான் யார்" என்று தெரிந்து கொண்டால் அனைத்து புதிர்களுக்கும் தீர்வு கிடைக்கும்.

\- தாதாஸ்ரீ

dadabhagwan.org

9 789391 375287

Printed in India

Price ₹30